# பகவத் கீதை அகவல்





மி. சங்கரநாராயணன், M.A., B.Sc., M.A.,
புள்ளியியல் இணை இயக்குநர் (ஓய்வு)

# பகவத் கீதை அகவல்


**மி.சங்கரநாராயணன்,** M.A.,B.Sc.,M.A.

**புள்ளியியல் இணை இயக்குநர் (ஓய்வு)**





**PUBLISHER**

**L.J.S. TRADERS**

AK.33, 11th MAIN ROAD
ANNANAGAR
CHENNAI - 600 040
Phone No.6211530

## என்னுரை

1. இராமாயணமும், மகாபாரதமும் இந்திய நாட்டிற்கு வழிகாட்டும் இரு கண்களாகக் கருதப்படுகின்றன. இவை, இந்து மதத்தைச் சார்ந்தவை. எனவே, இந்திய நாட்டிற்கு வழிகாட்டியெனப் பொதுவாகக் கூறமுடியாது என்பாரும் உளர். இது ஒரு வகையில் சரியெனத் தோன்றும் இதர மதங்கள் இந்நாட்டில் கால் .ஊன்றுவதற்கு முன்னரே இக்காவியங்கள் தோன்றியவை. எனவே இவைகளின் கதைகளும் கதாபாத்திரங்களும் அன்று வேர் ஊன்றிய இந்து மதத்தைச் சார்ந்துள்ளன. எனினும், எல்லாமதத்தினரும் போற்றுதற்குரிய நூல்கள் என்பதைப் பெரும்பான்மையோர் ஏற்றுக் கொள்வர்.

2. இரண்டு நூற்களிலும் உள்ள அடிப்படைக்கருத்து ஒன்றுதான். அழிவிற்கெல்லாம் மூலவித்து ஆசைதான். ஆசை பலவாகலாம். இதில், அரசன் ஆண்டி என்ற வேறுபாடில்லை. கல்வி, கேள்வி, அறிவு, ஆற்றல், தனம், தானம், தவம், படைவலி, கொடை, வீரம், புகழ் என்று எந்நிலையில் உயர்ந்து இருப்பினும் ஆசை வலையில் சிக்கினால் விதி விலக்கின்றி அழிவுறல் திண்ணம்.

3. இன்சுவைக் கனிகளில் மிகச் சத்தான பாகம் உள்ளே இருக்கும். இதுபோன்று மகாபாரதத்தில் இரண்டு கதா பாத்திரங்களுக்கிடையே நடந்த உரையாடல் இன்சுவைப் பகுதியாகும், ''கீதா உபதேசம்'' தற்போது பகவத்கீதை என்று அழைக்கப்பெற்றுப் போற்றப்பட்டு வருகின்றது.

4. இந்த அற்புத நூலுக்கு உரைகண்டோர் பலர். முதலில் ஆதிசங்கரர், பின்னர் இராமானுஜர், அடுத்து மத்வர் விளக்கமான விரிவுரை வழங்கியுள்ளனர். தற்போது பலமொழிகளில் அறிஞர்களால் மொழி பெயர்க்கப்பட்டுள்ளது. இதுவே இந்நூலின் பெருமைக்குச் சான்று.

5. திரு. ஞான தேவரும், திரு. பாலகங்காதர திலகரும் மராத்தி மொழியில் உரை வளம் கண்டனர். மகான் அரவிந்தர் பகவத் கீதை பேருரைகள் என்ற தலைப்பில் கட்டுரைகள் எழுதியுள்ளார். சென்னை மாநிலக் கல்லூரி சமஸ்கிருதப் பேராசிரியர், ராவ் பகதூர் திரு.எம்.ரங்காச்சாரியார் அவர்கள் தொடர் சொற்பொழிவு ஆற்றியுள்ளார். தத்துவ மேதை சர் இராதாகிருஷ்ணன், மூதறிஞர் இராஜாஜி, சுவாமி சிவானந்தர், சுவாமி சித்பவானந்தா, சுவாமி சின்மயானந்தா ஆகியோரும் மொழிபெயர்த்து உரைவளம் கண்டனர். மகாகவி சுப்பிரமண்ய பாரதி, கவியரசு கண்ணதாசன் திரு.கிரிதாரி பிரசாத் என்போரும் தமிழில் உரை எழுதியுள்ளனர். ஆச்சார்ய வினோபாவின் கீதைச் சொற்பொழிவுகள் இந்திய நாட்டின் எல்லா மொழிகளிலும் வெளிவந்துள்ளன. ஆங்கில நாட்டில் பிறந்த திருமதி அன்னிபெசன்ட் அம்மையார் அவர்களும் ஆங்கிலத்தில் மொழி பெயர்த்துள்ளனர்.

6. இந்நூலை வழிபாட்டு நூலாக வழிபடும் வேளையிலும் அறநெறி போதிக்கும் வழிகாட்டும் நூலாகவும் கருதலாம். எல்லா மதத்தினருக்கும் எல்லா நிலையிலும் எல்லாப் பொருட்களையும் பற்றிக் கூறும் அறநூல்களில் தலை சிறந்தது திருக்குறள். கீதையும் இதைப் போன்றதே. செயலில் முனைந்த ஒருவன் எதிர்பாராத சூழ்நிலை காரணமாகச் செயலைச் செய்து முடிக்க சிந்தை தளர்ந்தபோது, ஊக்கம் அளித்துச் செயலின் பலனில் சிந்தையைச் செலுத்தாது, செயலைச் செய்து முடிப்பதே கருமமும் தருமமுமாகும் என்று அறிவுரை கூறும் அறநூலாகவும் கீதை விளங்குகிறது. மேலும் இது (எந்தச் செயலையும்) பயனில் கவனமின்றிப் பரத்தின்மேல் பாரத்தை வைத்துச் செயலைச் செய்வது ஒவ்வொருவரின் கடமையாகும் என வலியுறுத்தும்.

''செய்தக்க செய்யாமையானும் கெடும்''

பற்றுக பற்றற்றான் பற்றினை அப்பற்றைப்<br>
பற்றுக பற்று விடற்கு''

என்ற வள்ளுவர் கூற்றுக்கும் இது ஏற்புடைத்தாக உள்ளது.

7. இந்நூலைக் கவிதை வடிவில் மொழிபெயர்க்கும் எண்ணம் என் உள்ளத்தில் எழுந்து பலமுறை முயன்றும், தொடர்ந்து எழுதி, முற்றப் பெறச் செய்ய உடல் நிலையும் உள்ள நிலையும் ஒத்துழைக்கவில்லை. மீண்டும் பலமுறை முயன்று, முடித்து, இருமுறை திருத்திய வடிவம் கொடுத்தேன். எனினும் திருப்தி ஏற்படவில்லை. இனியும் காலம் தாழ்த்துவது சரியன்று என்ற நிலையில் இரண்டாவது முறை திருத்திய நிலையிலேயே முடித்தேன்.

8. வடமொழி மூலத்திலிருந்து நான் நேரடியாக மொழிபெயர்க்கவில்லை. திருமதி அன்னிபெசன்ட் அம்மையாரின் ஆங்கில மொழி பெயர்ப்பின் நடையும், போக்கும் பொருட்செறிவும் என்னைக் கவர்ந்தன. எனவே, அதையே எனக்கு வழிகாட்டியாக, வைத்து எழுதினேன்.

9. ஆங்கில மொழிபெயர்ப்பைத் தழுவி எழுதியதால், சொற்சுவை, பொருட்சுவை இனங்களில் நிறைகுறை காணலாம். நிறைவின் காரணம் பல அறிஞர்கள் எழுதிய விளக்கங்களைப் படித்ததால் பெற்ற பயன். எனவே, நிறைவின் பெருமை அவர்களைச் சாரும். குறை என்னுடையது. அறிஞர்கள் பொறுக்க வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன். பொருள் அமைதி வேண்டி விரிவுபடுத்திய இடங்களில் யாப்பமைதி கெட்டிருக்கலாம். செய்யுள் வடிவில் இருப்பதால், எதுகை மோனை கருதி சில சொற்கள் மிகைபட்டிருக்கலாம். சில விடுபட்டிருக்கலாம். புலவர்கள் பொறுத்தருள வேண்டும்.

10. இந்த முயற்சியில் வடமொழி தெரிந்த நண்பர் **திரு.நா.அருணாசலம்**, தமிழக அரசின் நிதித்துறை முன்னாள் துணைச் செயலர், குறைகளைச் சுட்டிக்காட்டி உதவினார். மேலும் என் உறவினர் குலசேகரபுரம் புலவர் **திரு.வே.மயிலேறும் பெருமாள் பிள்ளை** அவர்கள் இலக்கண அமைதியும் பார்த்து நல்லதோர் அணிந்துரை அளித்துள்ளார். அச்சுப்பிழை திருத்துவதில் புள்ளியியல் முன்னாள் துணை இயக்குநர் **திரு.ம.லஜபதி** அவர்களும் உதவினார். **திரு.த.இராமர்,** பல வழிகளில் எனது பணி எளிதில் நிறைவேற உதவினார். இவர்களுக்கு என் இதயம் கலந்த நன்றி என்றும் உரித்தாகும்.

11. எடுத்த முயற்சியை முடிக்கத் தளர்ந்த நிலையில் தொடர்ந்து எழுதி முற்றுப் பெறச் செய்ய ஊக்கம் அளித்த என் வாழ்க்கைத் துணைவி **திருமதி. சாந்தா** வின் பங்கு பெரிதாகும். படித்துப் பார்த்து மேலும் தெளிவு பெறச் செய்ததால் நன்றிக்கும் உரியவராவர்.

12. இளம் வயதில் இயற்கை எய்திய என் அருமைச் செல்வன் **தாணுவின்** பிரிவுத் துயரில் அமைதி பெற வேண்டும் என்ற ஆத்ம திருப்திக்காகவே இது எழுதப்பெற்றது. மேலும் என் குடும்பத்தினரும் படித்துப் பயன்பெற வேண்டும் என்ற எண்ணமும் இடையே எழுந்தது. இவையே இப்பணிக்குத் தூண்டுகோலாக அமைந்தன.

13. மத, இனக் கலவரங்கள் மலிந்துள்ள இந்நாளில், ஒரு சமய நூலைவெளியிடுவதற்கு நிதிவிரும்பிய என் சிறு வேண்டுகோளை ஏற்றுச் சாதி, மத, மொழி வேறுபாடின்றித் தாராளமாய் விரைந்து நிதி உதவிய அன்பர்களின் செயல் என் உள்ளத்தை நெகிழச் செய்தது, அவர்களுக்கு என் இதயத்து நன்றியை என்றும் உரித்தாக்குவதோடு அவர்கள் வாழ்வில் இறையருளும் நிறைந்து பெருக இறைஞ்சுகின்றேன்.

14. என்னை வளர்த்துக் கல்வி அளித்து ஆளாக்கித் தனது முதிர்ந்த வயதில் இயற்கை எய்திய என் தாயார் **திருமதி. வ.காத்தம்மாள்** அவர்களுக்கு இதை அன்பு காணிக்கையாக்குவதைக் கடமையாகவும் பெருமையாகவும் கருதுகின்றேன்.

இன்னல்களுக்கு இடையே எடுத்த முயற்சியை வெற்றிபெற அருளிய திருவருள் துணையைப் பெரிதும் வாழ்த்துகின்றேன்.

**கண்ணன் கழலடிச் சரணம்**

**அன்பன்**

**மி.சங்கரநாராயணன்**

09.02.96

**அண்ணாநகர்**

**சென்னை - 40.**

# மறு பதிப்பின் முன்னுரை

பகவத் கீதைக் கவிதை என்ற நூலைப் பலதுறைகளிலும் பல நிலைகளிலும் உள்ள, பண்டிதர் முதல் பாமரர் வரையிலும் படித்துப் பாராட்டியுள்ளனர். பொதுவாக எல்லோரும் இந்நூல் மிக எளிமையாகவும், தெளிவாகவும், இனிமையாகவும் உள்ளது என்று குறிப்பிட்டுள்ளனர். சிலர் தங்களைப் பெரிதும் கவர்ந்த பகுதிகளை எடுத்துக்காட்டியும் உள்ளனர். மொழி பெயர்ப்பு நன்றாக உள்ளது என்று வடமொழி தெரிந்த பெரியார்கள் தொலைபேசியில் கூறினர்.

எல்லாவற்றிற்கும் மேலாக காஞ்சி காமகோடி பீடாதிபதி ஸ்ரீ ஜயேந்திர சங்கராச்சாரியர் அவர்களும் நூலின் எளிமையைப் பாராட்டி ஆசியும் அருளித்திருமுகம் அனுப்பியுள்ளார். இதனால் மனதில் நெகிழ்ச்சியும், மகிழ்ச்சியும் ஏற்பட்டன. மறு பதிப்புக் கொண்டுவர வேண்டியநிலை ஏற்பட்டது. முதலில் அகவல் முறையில் எழுத வேண்டுமென்று நினைத்துப் பல காரணங்களால் முடியாததைத் தற்போது நிறைவு செய்ய வேண்டுமென்று எண்ணி, நண்பரின் உதவியை நாடினேன். சுமார் ஐம்பது ஆண்டுகளாகத் தொடர்பு உடையவரும், சுமார் நானூறு மைல்களுக்கப்பால் நாகர்கோவிலில் கல்லூரிப் பேராசிரியராக உழைத்து ஓய்வு பெற்று இலக்கியத்துறையில் தொடர்ந்து பணியாற்றி வரும் பண்டித வித்வான் டாக்டர்.சி.சுப்பிரமணியன், M.A.,BOL.,Ph.D. அவர்களிடம் என் கருத்தைக் கூறினேன். ஆழ்ந்த அகன்ற கல்வி அறிவு புலமை உடையவர். முதுகலைப் படிப்பு மாணவர்களுக்குப் பல ஆண்டுகள் பயிற்சி அளித்த நீண்ட அனுபவம் உடையவராவர்.

முதலில், பகவத் கீதைக்கவிதை நூலில் உள்ள குறைகளை விருப்பு வெறுப்பின்றிச் சுட்டிக்காட்ட வேண்டினேன். பின்னர் அவர்கள் அறிவுரைப்படி இருமுறை திருத்தி அவர்களது ஒப்புதலோடு தொலைபேசியிலும் பலமுறை தொடர்புகொண்டு ஐயங்களைத் தீர்த்துக் கொண்டேன். நண்பருக்கு நன்றி சொல்வது சடங்காகவே அமையும். ஏனெனில் நன்றிக்கும் அப்பாற்பட்டவர். நூலின் பெருமைக்கும் உரியவராவர். எனவே இதயத்தில் ஏற்றமுற வைத்துள்ளேன்.

பலமுறை படிகள் எடுத்து உதவிய திருமதி மல்லிகா மனோகர் அவர்களுக்கு எத்தனை முறை நன்றி கூறினும் பொருந்தும்.

இம்முயற்சியில் பல நிலையில் பாராட்டும், உதவியும் அறிவுரையும் வழங்கிய அன்பர்கள் அனைவருக்கும் என் இதயத்தின் நன்றியைத் தெரிவித்துக் கொள்கின்றேன்.

அன்பன்.
**மி.சங்கரநாராயணன்**

சென்னை
09.10.1996.

ஸ்ரீ சந்தர மௌனீச்வராய நம
ஸ்ரீ சங்கர பகவத் பாதாச்சார்ய பரம்பராகத்
ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி ஜகத்குரு
ஸ்ரீ சங்கராச்சாரிய ஸ்வாமிகள் அவர்கள்

ஸ்ரீமடம் ஸமஸ்தானம்
நெ. 1, சாலை தெரு, காஞ்சிபுரம் 631 502.

தேதி : 28.03.96

கடமையை ஆற்றவேண்டிய அருங்கணத்தில் அகங்கார மமகாரங்களால் அதனை மறந்து வேதாந்தியாக நடித்த பார்த்தனுக்கு, அவனது கடமை - அதை ஆற்ற வேண்டிய இன்றியமையாதது - அவ்வாறு ஆற்ற வேண்டி முறைகள் முதலிய செய்திகளை விளக்கி கடமையுணர்வு ஊட்டியவர் பகவான். அவரால் வழங்கப்பட்ட செய்திகள் மகாயோகியான ஸஞ்சயனால் கௌவரக் குலத்திலகரான திருதராஷ்டிரற்கு விளக்கப்பட்டது இதுவே ஸ்ரீமத் பகவத் கீதை.

இது ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு கணமும் உதவக்கூடிய செய்திகள் நிரம்பியது.

700 சுலோகங்கள் அடங்கும் இதனை எளிய நடையிலமைந் துள்ள பாக்களால் பாடி மகிழ்ந்துள்ளார் திருவாளர் மி. சங்கர நாராயணன்.

தமிழைத் தாய் மொழியாகப் பெற்றவர்கள் அனைவருமே படித்துப் புரிந்து கொள்ளும் வகையில் அமைந்துள்ள பகவத் கீதைக் கவிதை என்ற இந்நூலைப் படித்து நல்ல செய்திகளை உணர்ந்து வாழ்வில் கடைப்பிடித்து மனித வாழ்வினைப் பயனுடையதாக மிளிர வைத்து கொள்வார்களாகப் பலரும் என ஆசீர்வதிக்கிறோம்.

**ஸ்ரீ நாராயண ஸ்ம்ருதி**

# மனிதரிலே தேவரென வாழ்வோம் வாரிர்

1. *பாரிலுள்ளோர் நல்வாழ்வு வாழ்தல் வேண்டி*
*பரந்தாமன் அருளிய வோர் அருளாம், கீதை,*
*யார் யார்க்குப் பொருந்தும் என்றெண்ணல் வேண்டாம்*
*எல்லாருக்கும் பொருந்தும் ஓர் இனிய நீதி.*

2. *ஆதியிலே வடமொழியில் எழுந்த நூற்கு*
*அருளாளர் பலர் விளக்க உரையும் சொன்னார்*
*நீதி மிக்க அந்நூலை ஆங்கிலத்தில்*
*நெறியோடு மொழிபெயர்த்தோர் புலமை மிக்கோர்.*

3. *அதைப்படித்த நம் நண்பர் ஆற்றல் மிக்கார்*
*அருந்தமிழில் நமக்காக்க ஆர்வம் கொண்டார்*
*சிதையாமல் அதன் கருத்துச் செறிவும் பேணி*
*செந்தமிழில் பாநடையில் ஆக்கித் தந்தார்.*

4. *சங்கரனார் அகத்தியர்க்குத் தமிழைத் தந்தார்*
*தரணியிலே அவர் தமிழை வளர்த்துக் காத்தார்*
*சங்கர நாராயணப் பெயர் பூண்ட நமது அன்பர்*
*தமிழிலே கீதையைப்பாவாக்கியுள்ளார்*

5. *கதி மோட்சம் நாமடைய வேண்டுமென்றால்*
*கருத்துடனே இந்நூலை நாளும் நாளும்*
*மதி தெளிய மனம்தெளிய ஓதி ஓதி*
*மனிதரிலே தேவரென வாழ்வோம் வாரீர்*

குலசேகரபுரம்
27.10.1995

புலவர் வே.மயிலேறும் பெருமாள்பிள்ளை

# பொருளடக்கம்

# பகவத் கீதை அகவல்

## அத்தியாயம் - 1

### அருச்சுனன் கலக்கம்

திருதராஷ்டிரன் வினவுவான்

*01-01* *சஞ்சய! அறநில மாம்குருச் சேத்திரக்*
*001* *களத்தில் போரிட விரும்பித் திரண்ட*
*எம்மவர் பாண்டவர் செய்தது என்னே?*

சஞ்சயன் கூறுவான்

01-02 *பாண்டவர் படையின் அணியினைப் பார்த்து*
*002* *மன்னன் துரியோ தனன்தன் ஆசான்*
*அருகே சென்று கூறலுற் றானே.*

*01-03* *ஆசான் ஐயனே, துருபதன் தனயன்*
*003* *தங்கள் அறிவுசால் மாணவன் நடத்தப்*
*பாண்டவர் படைகள் பலமுடன் திரண்டு*
*நின்றிடும் காட்சியைப் பாரீர் நேரிலே.*

*01-04* *வீமனை விசயனைப் போரிலே ஒப்பார்*
*004* *வரிவில் வீரராம் பெருந்தோள் துருபதன்*
*விராடன் உயாதரன் என்போர் நிற்பரே.*

*01-05* *திருஷ்ட கேதொடு சேகித் தானன்*
*005* *வீரனு மான காசிமா மன்னன்*
*புருசித் குந்தி போஜன் மற்றும்*
*சைபியன் என்ற மனித ஏறுமே*

01-06 வல்உதா மன்யு, வீரனாம் உத்மஜா
006 சுபத்திரை புத்திரன், திரௌபதி மக்கள்
அனைவரும் வீரரே பெருந்தேர் போரிலே

01-07 நம்படைத் தலைவர் தமையும் அறிவீர்
007 இருபிறப் பாளரில் ஏற்றம் பெற்றோய்,
எம்படைத் தலைவர் பெயர்கள் தம்மை
உமக்கு நானும் உரைப்பேன் தெரியவே.

01-08 தலைவரோ தாங்கள், வீடுமர் கர்ணன்
008 போரெனில் வெற்றியே சூடிடும் கிருபன்
அசுவத் தாமன் விகர்ணன் சோம
தத்தன் புதல்வன் முதலோர் சேர்ந்தே

01-09 வீரரோ மேலும் ஏரா ளம்பேர்
009 போரிலே நல்ல சிறந்த வீரராம்
எனக்குத் தமது இன்னுயிர் துறக்க
பல்வகைப் படைக்கலக் கருவிகள் தாங்கிக்
கணைகளை ஏந்திநிற் பதைக்கா ணீரே

01-10 வீடுமர் தலைமை நம்படை திரனினும்
010 போதும் என்னும் திருப்தி உணரேன்
வீமனே பாண்டவர் படையினை நடத்தினும்
போதும் என்றே எண்ணுவன் நானே.

01-11 அணியில் அனைத்து நிலையில் நிற்கும்
011 வீரரும் தம்நிலை உறுதியாய் நின்றே
பெரிதும் பீஷ்மரைக் கவனமாய்க் காக்கவே

01-12 குருகுல மூத்தவர் முதுபெரும் கிழவர்
012 பெரும்புகழ் உடைய பிதாமகர் வீடுமர்
மன்னன் மனத்தில் ஊக்கம் ஊட்டிடச்
சங்கை ஊதினார் சிங்கம் போலவே

01-13 பின்னர் சங்குகள் பெரிதாம் பேரிகை
013 தாரதப் பட்டை கொம்புகள் திடீரெனப்
பிளிறியே ஒலித்த பேரொலி எழுந்ததே.

01-14 வெண்ணிறப் புரவிகள் பிணித்த தேர்களில்
014 மாதவன் மற்றும் பாண்டுவின் புதல்வர்
தத்தமக் குரிய தெய்வச் சங்குகள்
உரக்க ஊதவே ஒலியும் எழுந்ததே

01-15 பாஞ்ச சன்யம் பரந்தா மனூதவே
015 தனஞ்சயன் ஒலித்ததோ தேவ தத்தமே
ஓநாய் உதர அருஞ்செயல் வீமனும்
பலத்ததன் சங்கு பௌண்டிரம் ஊதவே

01-16 குந்தியின் மைந்தன் உதிஷ்டிர மன்னன்
016 ஊதிய சங்கோ அனந்த விசயம்
நகுல சகதேவ் சோதரர் முறையே
ஊதினர் சுகோசம் மணிபுட் பகமே.

01-17 பெருவில் வல்லவன் காசிமா மன்னன்
017 சிகண்டி என்னும் திண்தேர் வீரனும்
திருஷ்டத் யுமனனும் விராட மன்னனும்
தோல்வி கண்டிராச் சாத்திய கியுமே.

01-18 மன்னா! என்றே பின்னும் தொடரும்
018 துருபத மன்னன் துரோபதை மக்கள்
சுபத்திரை புத்திரன் தடந்தோள் வீரனும்
எங்குமே சங்கொலி எழுப்பிநின் றாரே.

01-19 எழுந்தது பேரொலி எங்குமே எதிரொலி
019 மண்ணும் விண்ணும் நிறைந்தே ஒலித்தது
திருதராஷ் டிரர்தம் இதயமோ பிளந்ததே

01-20 திருத ராஷ்டிரர் திரண்ட படைகள்
020 அணியாய் நிற்கும் அமைப்பைப் பார்த்துக்
கணைகளை விடுத்துக் கடும்போர் தொடங்குமுன்
குரங்குக் கொடியுடை பாண்டுவின் புதல்வன்
கண்ணன் இடத்தில் இவ்வுரை கழலுமே.

அருச்சுனன் கூறினான்

01-21 அச்சுதா! இரண்டு படையின் நடுவில்
021 எனது தேரை நிறுத்துக நீயுமே

01-22 போரினை விரும்பி ஈண்டு நிற்பார்,
022 இனியுள போரில் நானுமே எதிர்த்துப்
போரிட உள்ளார் தமையும் காணவே.

01-23 திருதராஷ் டிரர்தம் துன்மதி மைந்தனைப்
023 போரில் திருப்தி செய்திட விரும்பிச்
சமர்செயத் திரண்டு ஈங்கே நிற்பார்
தமையும் நன்றாய்ப் பார்த்துத் தெரியவே

சஞ்சயன் கூறுவான்

01-24 பாரத மன்னா! குடாகேசு கூறலும்
024 இரண்டு படையின் இடையில் சிறந்த
தேரைக் கிருஷ்ணன் விரைந்து செலுத்தியே

01-25 வீடுமர் துரோணர் தரணியாள் மன்னர்
025 எல்லோர் எதிரில் தேர்தனை நிறுத்தித்
திரண்டு நிற்கும் கௌரவர் தமையே
பார்த்தா! பாரெனப் பகர்ந்தான் கண்ணனே.

01-26 எதிரில் நிற்கும் இரண்டு படையில்
026 எதிரும் புதிருமாய் எதிர்த்தே நிற்கும்
& பாட்டர் பேரர் மாமர் மருகர்
01-27 அண்ணன் தம்பி அவர்தம் மைந்தர்
027 ஆசான் குருக்கள் அவர்களின் மக்கள்
நண்பர் உறவினர் நட்டார் நமதுநல்
வாழ்வு காணும் நாட்டம் உடையோர்
வரிந்தே நின்றிடும் வரிசை பார்த்தே

அருச்சுனன் கூறினான்

01-28 இதயம் தனிலே இரக்கம் மேலெழக்
028 குந்தி மைந்தன் போரிட நிற்கும்
உறவினர் கண்டே இவ்வுரை கழலுமே.

01-29 கைகள் தளரும் வாயுமோ உலரும்
029 உடலோ நடுங்கும் உரோமமோ குத்திடும்.

01-30 கையில் இருந்தே காண்டிபம் நழுவும்
030 சருமம் பூராப் பற்றியே எரியும்
நிமிர்ந்து நின்றிட முடிவது மில்லை
மனமும் சுழலும் என்று இயம்புமே.

01-31 துன்னிமித் தங்கள் தோன்றிடக் காண்பேன்
031 கேசவா! தமரைப் போரில் கொல்வதில்
நன்மை நானும் கண்டிலேன் ஏதுமே.

01-32 வெற்றியை நானும் விரும்பவு மில்லை
032 நாட்டிலும் சுகத்திலும் நாட்டமு மில்லை
நமக்கு நாடுதான் என்னே, போகமும்
என்னே, கிருஷ்ணா! வாழ்வும் என்னே

01-33 நாடும் சுகமும் போகமும் இன்பமும்
033 எவர்தமை வேண்டி இவற்றை விரும்பினோம்
அவர்தாம் அன்றோ ஈண்டுப் போரிட
உயிரும் பொருளும் துறந்த நிலையில்
கருவிகள் ஏந்தியே கண்முன் நிற்பரே.

01-34 குருக்கள் தந்தை தனயர் பாட்டர்
034 பேரர் மாதுலர் மாமர் மருகர்
மைத்துனர் மற்றுள உற்றார் தாமே.

01-35 இறப்பேன் எனினும் இவரைக் கொல்லேன்
035 மூவுலக ஆட்சியே கிடைப்ப தாயினும்
செய்திடேன் இதனை ஓ, மது சூதனா
இத்தரை ஆட்சியும் எனக்கும் என்னே

01-36 திருதராஷ் டிரர்தம் மக்களைக் கொல்வதில்
036 என்னதான் இன்பம் எய்திடும் நமக்கே
பாவியைக் கொல்வதில் பாவமே பற்றுமே

01-37 நம்மவர் சுற்றமே திருத ராஷ்டிரர்
037 அவர்தமைக் கொல்லல் தகாது மாதவா!
சுற்றம் கொன்றநாம் சுகமுறல் இலையே.

01-38 ஆசை இவர்தம் அறிவை அழித்திடக்
038 குடும்பம் அழிவதின் குற்றம் அறிகிலார்
நண்பருக் கிழைக்கும் துரோகம றியாரே.

01-39 குடும்ப அழிவின் கேடுணர் நாமே
039 இத்தகைப் பாவம் தவிர்த்து விலகிட
அன்பு சனார்த்தனா! அறியா ததென்னே

01-40 குடும்ப அழிவில் காலா காலக்
040 குடும்பத் தருமமும் அழிந்தே ஒழிந்திடும்
தருமம் அழியுமேல் அதர்மம் ஓங்கிடும்
அதர்மமோ குடும்பம் அனைத்தும் அழிக்குமே

01-41 அதர்மம் ஓங்கிடில் குலப்பெண் கெடுவரே
041 மாதரும் மாசுறில் வருணக் குழப்பம்
எழுந்தே உயரும் விருஷ்ணிகத் தோன்றலே

01-42 பிண்டமும் நீரும் பிதிர்கள் இழந்தே
042 விழ்ந்திடக் குலத்தொடு குலத்து ரோகியைக்
குழப்பம் இழுத்தே வீழ்த்தும் நரகிலே.

01-43 வருணக் குழப்பம் விளைகுணக் கேடர்
043 இழைக்கும் கேட்டால் தொன்று தொட்டு
நிலைத்து வந்திடும் வருணத் தருமமும்
குடும்பத் தருமமும் ஒருங்கே ஒழியுமே.

01-44 குலத்தின் தருமம் அழிவுறில் குடும்ப
044 மனிதர் இருக்கை இருண்ட நரகமே
என்றே சனார்த்தனா கேட்டுளோம் நாமே

01-45 அரச போக ஆசை யினாலே
045 சுற்றம் கொன்றிட முனைந்த நாமோ
பெரும்பிழை தனையே இழைக்கும் நிலையே

01-46 தடுப்பும் எதிர்ப்பும் தவிர்த்தே நானும்
046 நிராயுத பாணியாய் நின்றிடும் வேளை
திருத ராஷ்டிரர் போரிலே என்னைக்
கொல்வரே எனினும் நல்ல தாகுமே.

அருச்சுனன் கூறினான்

01-47 களத்தில் அருச்சுனன் இவ்வா றுரைத்தே
047 மனத்தில் துயரம் மலைபோல் மண்டிட
வில்லும் அம்பும் வீசி எறிந்தே
தேரின் இருக்கை ஆழ்ந்தான் சோர்ந்தே

# அத்தியாயம் - 2

## நன்னெறி முறைகள்

### சஞ்சயன் கூறுவான்

*02-01* இரக்கம் மேலெழ இதயம் குழம்பிட
*048* நீர்நிறை விழியுடன் நின்றவ னிடத்தே
மதுசூ தனனும் இவ்வுரை கூறுமே

### பகவான் கூறுவான்

*02-02* நெருக்கடி நேரம் வானுல கடைத்திடப்
*049* பெருமை அழிந்திட அருச்சுனா, தளர்ச்சி
எங்குநீ பெற்றாய் என்று வினவியே

*02-03* இயலா மைக்குநீ இடம்கொடுத் திடாதே
*050* இதுவோ உனக்கு ஏற்புடைத் தன்றே
உதறியே எறிந்திடு உள்ளத் தளர்ச்சியை
எழுகவே பரந்தப என்றான் பகவனே

### அருச்சுனன் கூறினான்

*02-04* பகைவரை மாய்த்திடும் ஓ, மது சூதனா
*051* வணங்கக் தக்கார் துரோணர் வீடுமர்
தம்மேல் கணைகளை விடுத்தலெவ் வாறே

*02-05* பெருமைக் குரியநம் குருக்களைக் கொல்வதின்
*052* இரப்பார் எச்சிலைப் புசித்தலும் பெருமை
நம்நலம் நாடும் குருக்களைக் கொன்றபின்
துயக்கும் இன்பம் குருதியில் தோய்ந்ததே.

02-06 நாமவர் வெல்வதா நமையவர் வெல்வதா
053 நமக்கெது நல்லது நானும் அறிகிலேன்
எவர்தமைக் கொன்றபின் நாம்வாழ்ந் திடோமோ
அவர்தாம் அன்றோ இத்திருதராஷ்டிரர்
ஈங்கே நம்மை எதிர்த்து நிற்பரே.

02-07 தளர்ச்சிக் கேட்டினால் இதயம் கனத்தே
054 கடமை அறிவதில் கலங்கும் புத்தியும்
எதுதான் சிறந்தது என்றுனைக் கேட்கிறேன்
உறுதியாய் அதனை எனக்கு நீ உரைத்திடு
அருள்நீ புரிந்தே அறிவுரை தருகவே.

02-08 எதிரிலா மன்னனாய் இத்தரை அரசும்
055 வானுல காட்சியும் வந்தெனை அடையினும்
புலன்களைப் பொசுக்கும் பொல்லாத் துயரைத்
துரத்தி விலக்கும் மார்க்கம றியேனே.

சஞ்சயன் கூறுவான்

02-09 பகைவரை வெல்பார்த் தன்குட கேசு
056 கிருஷ்ணன் இடத்தே உரைக்க லாயினான்
போரினைப் புரியேன் என்று புகன்றே
மவுனம் ஆயினான் கிருஷ்ணன் முன்னே

02-10 புன்னகை புரிதல் போன்றே கிருஷ்ணன்
057 இருபடை நடுவில் இளைத்து நிற்கும்
பார்த்தனை விளித்துப் பதிலிறுப் பானே

பகவான் கூறுவான்

02-11 எவர்தமை நினைத்து துயர்கொளல் தகாதோ
058 அவர்தமை நினைத்தே துயரம் கொள்வாய்
எனினும் நீயோ பேசுவாய் ஞானம்
இறந்தார் இருப்பார் எவர்தமை வேண்டியும்
அறிவுடை ஆன்றோர் துயரம் உறாரே

02-12 இதுவரை நானுமே இல்லா மலில்லை
059 இதுபோல் நீயுமே இல்லா மலில்லை
ஈங்குள மன்னரும் இதுபோன் றவரே
இனிமேல் நாமிலை என்பதும் இலேயே.

02-13 உடலில் உறையும் ஆன்மா வளர்ந்தே
060 குழந்தை இளமை முதுமை எய்தி
வேறோர் உடலில் சென்றிடும் எனவே
உறுதி உடையார் துயருறல் இலையே.

02-14 இயற்கைப் பொருளின் தொடர்பால் விளையும்
061 தட்பமும் வெப்பமும் இன்பமும் துன்பமும்
வந்திடும் சென்றிடும் நிலையிலா, பார்த்தா,
தைரியம் ஆகவே தாங்குக நீயுமே.

02-15 இவைதாம் எவரைத் துன்புறுத் தாவோ
062 இன்பம் துன்பம் என்றிரு நிலையிலும்
சமநிலை வகிக்கும் உறுதி உளத்தரே
அமரத் துவம்பெற அருகதை உடையரே

02-16 இல்லா தென்பன இருப்பது மில்லை
063 இருப்பன இல்லை யென்றா வதுமிலை
பொருட்கள் தத்துவம் புரிந்த முனிவோர்
இரண்டின் உண்மை நன்றாய் உணர்வரே

02-17 எங்கும் நிறைந்து நிலைத்து நிற்பதை
064 அழிவிலா என்றுநீ அறிந்து கொள்கவே
அழிவிலா அதனை அழித்தலும் அரிதே

02-18 அளவிடற் கரியன் அழிவிலா நித்தியன்
065 உறையும் உடலும் முடிவும் உடையதே
எனவே பார்த்தா, போரினைப் புரிகவே.

02-19 இவனைக் கொல்பவன் என்றுணர் வாரும்
066 இவனும் கொல்லப் படுமென் பாரும்
உண்மை உணரார் இவனோ கொல்லுதல்
இல்லை கொல்லப் படுவது மிலையே

02-20 இவன்பிறப் பதுமிலை இறப்பதும் இல்லை
067 பிறந்தபின் இல்லை என்பதும் இல்லை
பிறப்பிலா நிரந்தரன் நிலைத்த முன்னோன்
உடலைத் துணுக்கினும் கொல்லப் படானே.

02-21 அழிவிலா முடிவிலா நிலைத்த பிறப்பிலாத்
068 தேய்விலா என்றதை உணர்வான், பார்த்தா
கொல்வதும் கொல்ல ஏதுவும் இலையே.

02-22 நைந்த உடைகளைத் துறந்தே மனிதன்
069 புதுவுடை புனைவது போன்றே, உடலில்
உறையும் ஆத்மா ஒடிந்த உடலை
விடுத்தே புதியதோர் உடலிலும் புகுமே.

02-23 கருவிகள் அவனைக் காயப் படுத்திடா
070 நெருப்பும் எரித்திடா நீரும் நனைத்திடா
காற்று உலர்த்திக் காய்தலு மிலையே

02-24 வெட்டுறான் எரியுறான் நனைகிலான் உலர்கிலான்
071 எங்குமே நிறைந்து நிலைத்தே நிற்பான்
அசைவும் இல்லான் முன்னோ னுமாவனே.

02-25 உருவிலான் உணர்தற் கரியான் மாறிடான்
072 என்றவன் அழைக்கப் படுமென யறிந்தநீ
தொடர்ந்து துயரம் உறல்வேண் டாவே.

02-26 அன்றியும் நீயும் வேறு விதமாய்
073 நித்தமும் பிறந்து நித்தமும் இறக்கும்
என்றுமே எண்ணில் தடந்தோள் வீரனே
இதனை நினைந்து துயருறல் தகாதே.

02-27 பிறந்தார் இறப்பதும் இறந்தார் பிறப்பதும்
074 தவிர்த்திட முடியா உறுதி ஆனதே
இதற்காய் நீயும் துயருறல் என்னே

02-28 உயிர்கள் தோன்றும் நிலையில் உருவிலா
075 இடைநிலை ஒன்றிலே உருவம் உடைத்து
அழிவுறும் நிலையிலும் உருவிலா, எனவே
பார்த்தா, துயருற ஏதங் குளதே.

02-29 அற்புதம் என்றதை ஒருவன் கருதும்
076 அற்புதம் எனவும் ஒருவன் கூறுமே
அற்புதம் எனவியந் தொருவன் கேட்கும்
கேட்பினும் அறிந்தார் எவரும் இலையே.

02-30 ஒவ்வோர் உடலிலும் உறையும் ஆத்மா
077 என்றும் வடுப்படா இயல்பினை உடைத்தே
எனவே, பார்த்தா, எத்தகை உயிர்க்கும்
துயரம் உறுதலைத் தவிர்க்க நீயுமே

02-31 தான்தன் தருமக் கடமை கருதினும்
078 நடுக்கம் நீயும் கொள்ளல் வேண்டா
தருமயுத் தத்தில் சிறந்த பெருமை
எதுவும் இல்லை சத்திரி யனுக்கே.

02-32 தானாய் வந்திடும் தரும யுத்தமும்
079 வானுல கத்தின் திறந்த வாயிலாம்
இத்தகைப் போரெதிர் கொள்சத் திரியன்
இன்பம் எய்திய வனன்றோ பார்த்தனே.

02-33 இத்தகைத் தருமப் போரைச் செய்திலை
080 என்றால் உனது கடமை மதிப்பும்
துறந்து இழந்தும் பாவமும் பற்றுமே

02-34 மக்கள் உனது நிரந்தர இழிவை
081 நினைந்தே பேசுவர் பெருமை மிக்கோர்
எய்தும் இகழ்ச்சி சாவிலும் கொடிதே.

02-35 அமரிலே அஞ்சிநீ ஓடினாய் என்றும்
082 பெருந்தேர் வீரரும் உனையே பேசுவர்
முன்னம் உன்னைப் பெரிதாய்க் கருதினார்
எளியனாய் எண்ணும் நிலையும் எய்துமே

02-36 உனது திறனை இகழ்ந்தே எதிரிகள்
083 தகாத சொற்களைக் கூறிப் பழிப்பர்
இதனினும் துன்பம் வேறே இலையே.

02-37 இறக்க நேரிலோ வானகம் எய்துவாய்
084 வென்றிடில் வையக ஆட்சியே வந்திடும்
குந்தி மைந்தனே போரிடத் துணிகவே.

02-38 இன்பமும் துன்பமும் இலாபமும் இழப்பும்
085 வெற்றியும் தோல்வியும் சமமாய்க் கருதி நீ
வரிந்து கட்டியே போரிடப் புறப்படு
பாவமும் உன்னைப் பற்றுதல் இலையே

02-39 இதுவரை உனக்கு நானும் உரைத்த
086 அறிவுரை தருக்க மார்க்க முறையே
யோக வழியிலும் இதனைக் கேட்கவே
இவ்வுரை கேட்டுநீ தெளிவாய் அறியின்
கருமத் தளைகளைக் கழற்றி விடுகவே.

02-40 இதிலே முயற்சி வீணா வதில்லை
087 வரம்பு மீறிடும் வாய்ப்பு மில்லை
சிறிதாம் அறிவும் பெரும்பயம் போக்குமே.

02-41 குருகுலத் தோன்றலே புத்தியின் உறுதியும்
088 ஒருமுனைத் தாகுமே, உறுதி இலையேல்
எண்ணம் முடிவிலாக் கிளையாய்ப் பரவுமே.

02-42 வேதச் சொற்றொடர் தனிலே மகிழ்ந்து
089 வெளியில் தோன்றும் சொல்லிலே மகிழ்ந்து
மேலும் வேறு எதுமிலை என்றே
அழகிய சொற்களை அறிவிலி அரற்றுமே

02-43 சுயநல ஆசை தூண்டச் சுவர்க்கமே
090 இலக்காய்ப் பிறப்பே கருமப் பலனாய்
யோகமும் பதவியும் எய்திட விரும்பி
விதவித சடங்கை விதந்து கூறுமே.

02-44 பதவியும் போகமும் பற்றியே நிற்போர்
091 இவ்வுரை கேட்டு எளிதில் மயங்கியே
புத்தியும் உறுதியும் முனைப்பும் இழந்து
சமநிலை எய்தும் வாய்ப்பும் இழப்பரே

02-45 வேதம் விளக்கும் மூன்று குணங்களை
092 முழுதும் கடந்தே முனைந்து நீ நின்றிடு
எதிரிணை பண்புகள் கடந்து என்றுமே
தூய்மை உறுதியில் நிலைத்து நின்றே
அருச்சுனா, அடக்குநீ ஆத்மா தனையே.

02-46 எங்கும் நீர்நிறை இடத்துள ஏரியாய்
093 வேதமும் பயனுள தெளிந்தஞா னிக்கே

02-47 கருமம் புரிதலே கடமை உனக்குப்
094 பலனிலே என்றும் பங்கு உனக்கிலை
கருமப் பலனிலே கருத்து மிலாதே
கருமம் புரியா நிலையை விடுகவே.

02-48 பற்றைத் துறந்து யோகமோ டிணைந்து
095 வெற்றி தோல்வி சமமாய்க் கருதியே
கருமம் புரிந்திடு ஏ,தனஞ் சயனே
நடுநிலை தாமே யோகம் என்பதே

02-49 கருமப் புத்தியோ கத்தின் தாழ்ந்ததே
096 புத்தியில் புகலிடம் பெற்றிடு தனஞ்சய
பலனுக்குழைப்பார் நிலைபரி தாபமே

02-50 புத்திமான் துறப்பது நல்வினை தீவினை
097 இணைந்து கொள்க நீ யோகம் தனிலே
செயல்திறம் தானே யோகம் என்பதே.

02-51 புத்தியி லிணைந்த பெருந்தவ முனிவர்
098 கருமப் பயனைத் துறந்து பிறவித்
தளையில் விடுதலை அடைந்து இன்ப
வீட்டை நோக்கி விரைந்து செல்வரே

02-52 மாயச் சிக்கலின் புத்தியும் விடுபடின்
099 இதுவரை கேட்டவை இனியும் கேட்பவை
என்னோ என்னும் இயல்பு எய்துமே.

02-53 வேத விளக்க உரையில் மயங்காப்
100 புத்தியும் அசையா ஒருமுனைப் படினே
யோக நிலைநீ எய்திடல் கூடுமே

அருச்சுனன் கூறினான்

02-54 அறிவில் உறுதியும் சமநிலை யோகமும்
101 உடையான் அறிகுறி என்னே, கேசவா
உறுதி மனத்தான் எவ்விதம் பேசும்
எவ்விதம் இருப்பான் எவ்வா றியங்குமே.

02-55 இதய ஆசை அனைத்தும் துறந்து
102 தன்னிலே தானும் இன்புறு வானை
நிலைத்த புத்திமான் என்ற ழைப்பரே.

02-56 துன்பச் சூழலில் மனத்தில் பதற்றம்
103 இன்றி இன்ப நிலையில் என்னே
என்பார் அச்சம் ஆசை சினமும்
அகன்றார் நிலைத்த அறிவுடை முனிவரே

02-57 சுற்றிலும் முற்றும் பற்றும் மிலாது
104 நல்லன அல்லன நடப்பன எதிலும்
விருப்பும் வெறுப்பும் இல்லா னிடத்துள
அறிவே சமநிலை சார்ந்ததா மென்பரே.

02-58 ஆமை போன்று அவயவம் அனைத்தும்
105 எல்லாப் பக்கமும் உள்ளே இழுத்துப்
புலன்களைப் புலனுணர் பொருட்களி லிருந்தே
இழுத்து நிற்பான் அறிவும் முன்போல்
சமநிலை சார்ந்த தென்றே சாற்றுமே.

02-59 புலன்சுவை தரும்பொருள் வெறுக்கும் ஒருவனும்
106 புலன்தரும் சுவைதனை மறுக்கிலன், எனினும்
பரனைப் பார்க்கில் பொருட்சுவை அகலுமே.

02-60 ஆழ்ந்தே முயலும் அறிவுடை மனிதனின்
107 அடங்கா தியங்கும் புலனும் மனத்தை
வலிந்தே இழுத்துச் செல்லும் பார்த்தனே.

02-61 எல்லாம் அடக்கி என்னை நினைந்து
108 திடச்சித் தனாகிப் புலன்களை ஆள்வான்
அறிவின் நிலையும் யோகத் திணையுமே.

02-62 புலனுணர் பொருட்களை நினைப்பார் மனமும்
109 பொருட்கள் மீதிலே பற்றை வைத்திடும்
பற்றில் இருந்தே ஆசை தோன்றும்
ஆசை யிடத்தே சீற்றம் தோன்றுமே.

02-63 சினத்தி லிருந்தே மயக்கம் விளையும்
110 மயக்கத் தாலே மனமும் குழம்பும்
குழம்பிய மனத்தில் புத்தியும் அழிவுறும்
அறிவின் அழிவிலே அவனும் அழியுமே.

02-64 புலன்களை வென்றான் புலனுணர் பொருளில்
111 ஈர்ப்பு எதிர்ப்பு இலாது உலவியே
தன்வயப் படுத்தினான் அமைதி அடையுமே.

02-65 அமைதியில் வேதனை அனைத்தும் அழிவுறும்
112 அமைதி இதயத் தெய்திய மனிதன்
புத்தி விரைவில் யோகம் எய்துமே.

02-66 யோகம் இலான்திடப் புத்தி இலானே
113 யோகம் இலான்திடச் சித்தி இலானே
சித்தித் திடமிலான் அமைதி இலானே
அமைதி இலையேல் ஆனந்தம் ஏதே.

02-67 கடலில் கப்பலைப் புயலலைப் பதுபோல்
114 அலையும் புலன்வழி அலைபாய் மனமும்
அறிவை விரைந்து இழுத்து அகற்றுமே.

02-68 எனவே தடந்தோள் வீரனே புலன்களைப்
115 பொருள்வழிச் செலாது தடுத்து நிற்பான்
அறிவின் நிலையும் சமநிலை அடைந்தே.

02-69 எல்லா உயிர்தம் இரவு காலமே
116 புலன்களை வென்றார் விழிக்கும் பகலாம்
இதர உயிர்கள் விழிக்கும் பகலோ
தெளிந்த முனிவரின் இரவும் ஆகுமே.

02-70 நதிபல வீழினும் அசைவிலா நீர்நிறை
117 கடல்போல் ஆசை அநேகம் எழினும்
அசையா நிலைத்து நிற்பார் பெறுவார்
அமைதி, அல்லார் அமைதி இலாரே.

02-71 ஆசை அனைத்தும் அறவே விடுத்தும்
118 நானெனும் எனதெனும் ஆணவ மலமும்
விருப்பமும் இன்றி விரைந்து செல்வார்
எவரோ அவரே அமைதி அடைவரே.

02-72 இதுவே பார்த்தா பரம நிலையே
119 இதனை எய்துவார் மயங்கல் இலையே
இறக்கும் போதில் உறுதி உள்ளார்
பிரம்மம் சேர்ந்துபே ரின்பம் எய்துமே.

# அத்தியாயம் - 3

## கரும யோகம்

### அருச்சுனன் வினவுவான்

*03-01* சனார்த்தனா, புத்தியே செயலிலும் சிறந்தது
*120* என்றுநீ எண்ணிடில் இக்கொடுஞ் செயலில்
கேசவா, என்னைத் தூண்டலும் என்னே.

*03-12* குழம்பிய உன்னுரை யாலென் புத்தியைக்
*121* குழப்புவாய் இன்பம் நானும் எய்திட
உறுதியாய் ஒருவழி உரைநீ எனக்கே.

*03-03* குற்றம் இல்லாக் குணத்தனே, கேள்நீ,
*122* முன்னம் நானும் சொன்னது போன்றே
தருக்க வாதியர் ஞான மார்க்கம்
யோகிகள் தமது கரும மார்க்கம்
என்றிரு வழிகள் உலகில் உளவே.

*03-04* செயலைச் செய்யாச் செயலில் விடுதலை
*123* மனிதன் அடையான் செயலைத் துறந்தும்
பூரணம் எய்திட உயர்வதும் இலையே.

*03-05* கணப்பொழு தேனும் கருமம் புரியாது
*124* இருப்பது எவர்க்கும் இயலா தாகும்
ஏனெனில் இயற்கை இடத்தே உதித்த
குணங்கள் வேறே வழியிலா நிலையில்
செயலிலே செலுத்தும் அனைவர் தமையே.

*03-06* புலன்களை அடக்கினும் புலனுகர் பொருட்களை
*125* மனத்தில் நினைத்தே மயங்கும் மனிதர்
வேடதா ரியெனப் பேசிடப் படுவரே.

03-07 புலன்தம் உணர்வை மனத்தால் கட்டுப்
126 படுத்திச் செயல்புரி பலனில் பற்றும்
இன்றிக் கரும யோகம் புரிவார்
தமையே உயர்ந்தா ரென்றிடத் தகுமே.

03-08 விதித்தநற் கருமம் நீயுமே புரிந்திடு
127 செய்தலே செய்யா திருப்பதில் சிறந்தது
செயலிலா உடலைப் பேணலும் அரிதே.

03-09 வேள்வி விடுத்துப் பற்றுடன் புரியும்
128 கருமம் எல்லாம் தளையாம் உலகில்
எனவே குந்தி மைந்தனே நீயுமே
பற்று இலாதே கருமம் புரிகவே.

03-10 முன்னர் வேள்வியோ டிணைத்து மனித
129 இனத்தைப் படைத்த படைப்புத் தலைவன்
இதனால் நீங்கள் இனியும் பெருகுக
நினைப்பவை தந்திடும் காம தேனு
என்றே அவனும் இயம்பி யுளானே.

03-11 இதனால் தேவரை நீவிர் பரவுக
130 இதுபோல் தேவரும் உமையே பரவுக
ஒருவருக் கொருவர் இவ்விதம் பரவிடில்
உயர்ந்தே நன்மை எய்தும் உமக்கே.

03-12 வேள்வியில் உம்மால் பரவிடும் தேவரும்
131 நீங்கள் விரும்பும் போகமும் தருவரே
அடுத்தவர் கொடுப்பதைக் கைமா றின்றித்
தின்பான் திண்ணமாய்த் திருடன் போலுமே.

03-13 வேள்வியில் எஞ்சுதல் உண்ணும் நல்லோர்
132 பாவம் அனைத்திலும் விடுதலை அடைவர்
தமக்காய் உணவை சமைக்கும் பாவிகள்
பாவமே உண்ணும் படுபா வியாமே.

03-14 உணவில் இருந்தே உயிர்கள் வளரும்
133 உணவு வருவதோ மழையில் இருந்தே
மழையும் வருவதோ வேள்வியில் இருந்தே
வேள்வியும் விளைவதோ வினையில் இருந்தே

03-15 கருமப் பிறப்பிடம் பிரம்மம் என்றறி
134 பிரம்மம் பிறப்பது அழிவிலாப் பரத்திலே
எனவே எங்கும் நிறைந்த பரமும்
என்றும் நிலைத்தல் வேள்வி தனிலே

03-16 சுழலுமிச் சக்கரம் ஒட்டியொ முகானும்
135 பாப வாழ்க்கை உடையான் தானும்
புலன்வழி இன்பம் துய்த்திருப் பானும்
வாழும் வாழ்க்கை வீணா னதாமே.

03-17 தன்னிலே தானும் இன்புறு வானும்
136 தன்னிலே தானும் நிறையுறு வானும்
தன்னிலே தானும் போதுமென் பானும்
இனியும் செய்திட எதுவுமே இலையே.

03-18 இவனும் உலகில் இதுவரைச் செய்த
137 தொழிலிலும் செய்யாத் தொழிலிலும் தனக்கு
ஈடுபா டெதுவும் இல்லை என்னும்
எதனை வேண்டி எந்த உயிரைச்
சார்ந்து இருப்ப தென்பது மிலையே.

03-19 எனவே, என்றும் பற்று இன்றியே
138 செயத்தகு செயலைக் கடமை யெனச்செய்
பற்றிலாக் கருமம் செய்யும் மனிதன்
உயர்ந்த பரனை உறுதியாய் எய்துமே.

03-20 சனகர் முதலோர் கருமம் புரிந்தே
139 உண்மை யாகவே சித்தியும் எய்தினார்
உலக நன்மை கருத்தில் கொண்டே
கருமம் புரிந்திட வேண்டும் நீயே.

03-21 உயர்ந்தார் ஒருவர் எதனைச் செய்யுமோ
140 இதர மனிதரும் அதையே செய்வர்
உயர்ந்தார் கருதும் இலட்சிய வழியே
இதர மக்களும் தொடர்வர் தாமே.

03-22 பார்த்தா, மூன்று உலகிலும் நான்செய்ய
141 வேண்டிய கருமம் எதுவும் இலையே
பெறத்தகு பேற்றில் பெறாதது மில்லை
எனினும் நானும் செயல்புரி வேனே.

03-23 சோர்வு இலாதே செயல்புரி யேனேல்
142 சுற்றிலும் உள்ளோர் என்வழித் தொடர்வரே.

03-24 தொழிலை நானும் செய்யா திருந்தால்
143 அழிவிலே உலகம் ஆழ்ந்து வீழ்ந்திடும்
வருணக் குழப்பக் கருத்தா என்றும்
மேலும் உயிர்களைக் கொல்பவன் ஆவனே.

03-25 அறிவிலான் பற்றுடன் கருமம் செயல்போல்
144 அறிவுளான் உலகின் நன்மை கருதியும்
பற்றும் இலாதே செயலைப் புரிகவே.

03-26 பற்றுடன் கருமம் புரியும் அறிவிலான்
145 மனத்தை, அறிவுளான் குலைத்திட வேண்டாம்,
எனினும் என்னுடன் யோகத் திணைந்து
செயல்கள் எல்லாம் கவர்ச்சியாய்ச் செய்கவே.

03-27 செயல்கள் எல்லாம் இயற்கைக் குணங்கள்
146 தம்மால் இயக்கப் படுவன வாகுமே
அகந்தை மயக்கம் அடைந்தோன் தானுமே
தான்தான் செய்பவன் என்று எண்ணுமே

03-28 தடந்தோள் வீரனே குணங்கள் வகையும்
147 செயலும் மெய்யாய் நன்றாய் அறிவோன்
குணங்கள் தம்மிடைக் குணங்கள் இயங்கும்
என்றே எண்ணிப் பற்றிலா திருப்பனே.

03-29 இயற்கை குணங்களில் மயங்கினார் தாமே
148 குணங்களில் செயலில் பற்றுக் கொள்வரே
முற்றும் துறந்த ஞானியெஞ் ஞான்றும்
சிற்றறி பேதை தமைக்குலைத் திடாரே.

03-30 செயல்கள் அனைத்தும் எனக்கு அர்ப்பணி
149 சிந்தனை தனை ஆத் மாவிலே நிறுத்து
அகந்தை அகற்றி எதிர்பார்ப் பின்றி
மனக்கலக் கமறப் போரில் முனைகவே.

03-31 என்றும் இந்தவென் போதனை ஏற்று
150 முற்றிலும் நம்பியே அகந்தை அகன்றார்
செயலில் இருந்தும் விடுதலை பெறுவரே.

03-32 எனது போதனை தனையே குற்றம்
151 கூறியே அதன்வழி நடவார், அறிவும்
இலாதே எதிலும் மயங்கி மனமும்
இலராய் அழிந்திட வேண்டுவ ராமே.

03-33 ஞானியும் தமது இயற்கை யோடே
152 இயங்கும், உயிரினம் எல்லாம் இயற்கை
உடனே இணைந்து இயங்கும், எனவே
இதனை அடக்கலில் ஏதுதான் பயனே.

03-34 புலன்பொருள் மீதுன் விருப்பு வெறுப்பு
153 புலன்களில் தானே பொதிந்து உறையும்
எவருமிவ் வலையில் வீழ்ந்திட வேண்டா
இவையே வழியை அடைக்கும் தடையே.

03-35 அடுத்தவர் பணியைத் திறம்படச் செய்தலின்
154 தனது கடமை தானே செய்வதில்
தரமே குறையினும் சாலவும் சிறந்ததே
தன்தொழில் தனையும் புரியும் காலை.
சாவே வரினும் சாலச் சிறந்ததே
அயலார் பணியோ அபாயம் நிறைந்ததே.

அருச்சுனன் வினவினான்

03-36 விருஷ்ணிகக் குலத்தனே விரும்பா தபோது
155 வலிந்து வற்புறுத் தல்போல் மனிதனைப்
பாவம் செய்திடத் தூண்டலும் எதுவே.

பகவான் கூறுவான்

03-37 இராஜச குணத்தில் ஆசை கோபம்
156 பிறக்கும் என்பரே, மேலும் இவைதாம்
எல்லாம் அழிக்கும், எல்லாம் கெடுக்கும்
எனவே, இவைநம் எதிரியாம் உலகில்
என்பதை நீயும் அறிந்திட வேண்டுமே.

03-38 சுடரும் புகையால் சூழ்தல் போன்றும்
157 ஆடியும் தூசியால் மாசுறல் போன்றும்
கருப்பை கருவைச் சூழ்தல் போன்றும்
இதுவும் உலகைச் சூழ்தலும் உளதே.

03-39 ஞானியின் அறிவும் நிரந்தர ஆசை
158 என்னும் புகையால் தணித்திட முடியாத்
தழல்போல் சூழ்ந்து இருப்பது முளதே.

03-40 புலன்கள் மற்றும் மனமும் புத்தியும்
159 ஆசை உறைவிட மாகுமாம், அறிவைச்
சூழ்ந்தே மயக்கும் ஆன்மா தனையே.

03-41 எனவே, பாரத ஏறே முதலில்
160 புலன்களை அடக்கு, அடுத்து அறிவொடு
ஞானம் அழிக்கும் பாசம் கொல்கவே.

03-42 புலன்களே பெரிதாம் என்றே பேசுவார்
161 புலன்களின் பெரிதாம் மனமெனக் கூறுவர்
புத்தியே பெரிதாம் மனத்திலும் என்பரே
புத்தியில் பெரிதாம் ஆத்மா தானே.

03-43 எனவே, தடந்தோள் வீரனே, புத்தியில்
162 தானே தடுத்து நிறுத்திக் கடத்தற்
கரிய ஆசை பகையைக் கொல்கவே.

# அத்தியாயம் - 4

## அறிவும் செயலும் துறவும்

### பகவான் கூறுவான்

*04-01* *அழிவிலா யோகம் இதையும் முன்னர்*
*163* *விவாசுவான் தனக்கு நானும் கூறினேன்.*
*விவாசுவான் மனுவிடம் போதனை செய்தான்*
*மனுவும் உரைத்தான் இக்சவா வுக்கே.*

*04-02* *வழிவழி யாகவே வந்தவிவ் வறிவை*
*164* *இராஜ ரிஷிகளும் நன்கே அறிவார்*
*காலப் போக்கில், ஏ, பரந் தபனே*
*உலகில் யோகமும் அழிந்து ஒழிந்ததே.*

*04-03* *இந்தப் பழைய யோகம் தனையே*
*165* *நீயென் பக்தனும் நண்பனும் என்பதால்*
*இன்று நானும் உனக்கு உரைத்தேன்*
*இதுவும் ஒருயர் இரகசி யமாமே.*

### அருச்சுனன் கூறுவான்

*04-04* *உன்னுடைப் பிறப்போ பிந்திய தாகும்*
*166* *விவாசுவான் பிறப்போ முந்திய தாகும்*
*எனவே, இதைநீ முதலிலே கூறினாய்*
*என்பதை நானும் அறிவதெவ் வாறே.*

பகவான் கூறுவான்

*04-05* இதற்கு முன்னர் நீயும் நானும்
*167* எடுத்து விடுத்த பிறவி அநேகம்
அவைகளை நானும் அறிந்த போதிலும்
உன்னிலை ஒன்றும் அறியாய் நீயே.

*04-06* பிறப்பும் இல்லான் அழிவும் இல்லான்
*168* எல்லா உயிர்க்கும் ஈசனே எனினும்
எனதியற் கையிலே நானும் நிலைத்தே
எனதுமா யையால் எய்துவன் பிறப்பே.

*04-07* தருமம் அழிவுறும் காலத் தெல்லாம்
*169* அதர்மம் ஓங்கி உயருமே பார்த்தா,
அப்போ தெல்லாம் தோன்றுவன் நானே.

*04-08* நல்லோர் வாழவும் தீயவை புரியும்
*170* அல்லோர் அழியவும் அறமும் நிலைத்திட
காலம் காலமாய்ப் பிறப்பேன் நானே.

*04-09* எனது தெய்வப் பிறப்பும் செயலும்
*171* உள்ள வண்ணம் மெய்யாய் அறிந்தார்
உடலைத் துறந்தும் பிறவார் மீண்டும்
என்னிடம், அருச்சுனா, வருவார் தாமே.

*04-10* பாசமும் பயமும் கோபமும் நீங்கி
*172* என்மய மாகியே என்னிடம் தனிலே
புகலிடம் அடைந்து அறிவெனும் தீயில்
தூயராய் என்னில் இணைந்தார் பலரே.

04-11 எவ்வழி மனிதர் என்னை அணுகினும்
173 அவ்வழி அவரை நான்வர வேற்பேன்
ஒவ்வொரு திசையும் அவர்வரும் பாதை
எனதே, பார்த்தா, உணர்கவே நீயே.

04-12 உலகில் செயலில் வெற்றி விழைவார்
174 தேவதை தமையே தொழுதே வழுத்துவர்
மனிதர் நிறைந்த உலகில் வெற்றியும்
செயலில் இருந்தே விரைவில் விளையுமே.

04-13 செயல்களின் குணங்களின் பல்வகைப் பகுப்பிலே
175 நால்வகை வருணமும் நான் உருவாக்கினேன்
அழிவும் சோர்வும் எனக்கிலை எனினும்
இவைதம் கருத்தா நானென் றறிகவே.

04-14 செயல்கள் என்னைப் பாதிப்ப தில்லை
176 செயல்களின் பலன்நான் விரும்புவ தில்லை
இவ்வா றென்னை அறிவார் தாமும்
கருமத் தளையில் கட்டுறல் இலையே.

04-15 இதனை அறிந்த நமது முன்னோர்
177 விடுதலை வேண்டிக் கருமம் புரிந்தோர்
எனவே, நீயும் பண்டுநம் முன்னோர்
செய்ததைப் போன்றே கருமம் புரிகவே.

04-16 செயலெது செயலி லாதெது என்பவை
178 அறிவுடை ஞானியும் மயங்கியே உள்ளார்
எனவே உனக்குச் செயலை விளக்குவேன்
அதனை அறிந்த பின்னர் உனக்கே
கெடுதலில் இருந்தே விடுதலை வருமே.

04-17 செயலைப் பிரித்து அறிதலு மதுபோல்
179 அதர்மச் செயலைப் பிரித்து அறிதலும்
செயலிலா நிலையை அறிதலு அவசியம்
செயலின் பாதை விந்தை யானதே.

04-18 செயலிலே செயலின் மையைக் காண்பான்
180 செயலின் மையில் செயலைக் காண்பான்
எவனோ அவனே மனிதரில் அறிவுளான்
செயல்கள் எல்லாம் செய்து கொண்டே
யோகச் சமநிலை நிற்கும் அவனுமே.

04-19 எவர்தம் செயல்கள் ஆசை யதனில்
181 உருவா காதோ எவர்தம் செயல்கள்
அறிவெனும் தீயில் புடமிடப் படுமோ
அறிஞரும் அவரை முனிவர் என்பரே.

04-20 செயலின் பலனில் பற்றைத் துறந்தும்
182 என்றும் திருப்தி யடைந்தும் வேறே
புகலிடம் தேடா திருந்தும் செயலை
ஒருவன் செய்யும் போதில் எதுவும்
செய்யா திருப்பான் போன்றவ னாவனே.

04-21 எதையும் நம்பி எதிர்பா ராதார்
183 மனத்தொடு தன்னைக் கட்டுப் படுத்தி
ஆசை அனைத்தும் அறவே துறந்து
உடலைக் கொண்டே கருமம் புரிவார்
எவ்வகைப் பாவமும் இயற்றல் இலையே.

04-22 முயற்சி இன்றிப் பெற்றவை தம்மில்
184 திருப்தி அடைந்து பொறாமை இலாதும்
எதிரிணைப் பொருளில் விலகியே நின்றும்
செயல்புரி போதிலும் தளையுறல் இலையே.

04-23 பற்றும் அற்றே விடுதலை பெற்றான்
185 எண்ணம் எல்லாம் அறிவில் நிலையாய்
வேள்வி வேண்டியே வினைகள் புரிவான்
கருமம் எல்லாம் உருகி ஒழியுமே.

04-24 பிரம்ம அவியைப் பிரம்மார்ப் பணமாய்ப்
186 பிரம்மத் தீயிலே பெய்தே, பிரம்ம
வேள்வியும் செய்தே, செயலில் பிரம்மம்
காண்பான், பிரம்மம் தனையும் அடையுமே.

04-25 ஒருசில யோகிகள் தேவரைக் குறித்தே
187 வேள்வி புரிந்தே வழிபடல் உண்டே
வேறு சிலரோ பிரம்மத் தீயில்
வேள்வி தனையே ஆகுதி யாக்குமே.

04-26 சிலரோ செவிமுத லாகிய புலன்களை
188 அடக்கமாம் தீயில் ஆகுதி யாக்குவர்
வேறு சிலரோ ஒலிமுத லாகிய
புலனுணர் பொருட்கள் தமையே புலனாம்
எரியில் ஆகுதி என்றும் அளிப்பரே.

04-27 அறிவும் அடக்கமும் இணைந்து கொழுந்திட
189 யோகம் என்னும் எரியில் புலன்கள்
அனைத்தின் செயலும் உயிரின் இயக்கமும்
எல்லாம் அவியாய் அளிப்பார் சிலரே.

04-28 சொத்தை அர்ப்பணம் ஆக்குவர் ஒரு சிலர்
190 தவத்தை அர்ப்பணம் ஆக்குவர் மறுசிலர்
யோகம் தனையே அளிப்பார் சிலரே
மனத்தை அடக்கி நோற்றோர் தம்மில்
கற்ற வித்தை அளிப்பார் சிலரே
அறிவை அளிப்பார் வேறு சிலரே.

04-29 மூச்சை அடக்கி முனைந்து நின்றே
191 வெளிவிடும் மூச்சை உட்கொளும் மூச்சிலும்
உட்கொளும் மூச்சை வெளிவிடும் மூச்சிலும்
உள்ளும் புறமும் செல்லும் மூச்சை
கட்டுப் படுத்தியே வேள்வியு மாக்குமே.

04-30 உணவில் ஒழுங்கு உள்ளார் சிலரும்
192 உயிராம் மூச்சில் உயிராம் மூச்சை
ஆகுதி என்றே அளிப்பதும் உளதே
வேள்வியை விரிவாய் அறிவார் இவர்தாம்
வேள்வி மூலமாய்ப் பாவம் அழிப்பரே.

04-31 வேள்வியில் எஞ்சிய உயிர்தரும் அமிர்தம்
193 உண்போர் மாறிலாப் பரமும் அடைவர்
வேள்வி இயற்றார் இவ்வுல கெய்தார்
என்னில் இவர்க்குப் பரலோ கமேதே.

04-32 பரத்தின் முன்பாய்ப் பல்வகை வேள்வி
194 விரிவாய் விளக்கப் பட்டுள எல்லாம்
செயலில் இருந்தே பிறந்தன என்றறி
அறியில் விடுதலை அடைவாய் நீயே.

04-33 பொருளால் செய்திடும் வேள்வியில் எல்லாம்
195 ஞான வேள்வியே ஞாலத் துயர்ந்தது
ஞானம் தனிலே கருமம் முழுதுமாய்க்
கலந்திடும் என்றுநீ, பார்த்தா, அறிகவே.

04-34 தொழுதும் வணங்கியும் பணிவிடை புரிந்தும்
196 வினவியே நீயும் இதனை அறிகவே
பொருளின் உண்மை அறிந்த ஞானியும்
ஞான அறிவுரை அளிப்பர் உனக்கே.

04-35 இதனை அறிந்தால் பாண்டவா மீண்டும்
197 குழப்பம் தனிலே நீயும் விழ்கிலாய்
ஏனெனில், எவ்வித விலக்கும் இன்றியே
இதனால் உயிரெலாம் உன்னிலே காண்பாய்
உன்னிலே கண்டதும் என்னிலும் காணுமே.

04-36 பாவியில் கொடியே பாவிநீ ஆயினும்
198 பாவம் அனைத்தும் ஞானத் தோணியில்
நீயுமே கடந்து சென்றிட லாமே.

04-37 எரியும் தீயும் விறகை எரித்துச்
199 சாம்ப ராக்கும் தன்மை யதுபோல்
ஞானக் தீயும் கருமம் அனைத்தும்
அருச்சுனா, எரித்துச் சாம்ப ராக்குமே.

04-38 ஞானம் போலொரு தூய்மை செய்பொருள்
200 ஞாலம் தனிலே வேறிலை மெய்யாய்
யோகப் பக்குவம் அடைந்தார் தாமே
தக்க காலம் காண்பார் இதையே.

04-39 நம்பிக் கையுளார் ஞானம் பெறுவார்
201 புலன்களை வென்று ஞானம் பெற்றார்
விரைந்து பரத்தைச் சேர்தலு முனதே.

04-40 நம்புதல் இல்லான் ஐயுறும் அறிவிலி
202 அழிவினை அடையும் இதுவும் அன்றி
இகபரம் என்ற இரண்டு உலகும்
இன்பமும் எய்தார் ஐயுறு வாரே.

04-41 யோக மூலம் செயலைத் துறந்தார்
203 யோக மூலம் ஐயம் அகற்றினார்
தன்னை ஆள்வார் தனையே, செயல்கள்
பற்றிடா, தனஞ்சய, என்றுநீ அறிகவே.

04-42 ஐயத் துதித்து இதயத் துறையும்
204 அறியா மைதனை அறிவெனும் வாளால்
வெட்டி வீழ்த்தித் துண்டு படுத்தி
யோக நிலைகொளப் பார்த்தா எழுகவே.

# அத்தியாயம் - 5

## துறவு நிலை

### அருச்சுனன் வினவுவான்

*05-01* கிருஷ்ணா, செயல்களைத் துறத்தலைப் புகழ்வாய்
*205* அதுபோல் யோகம் தனையும் புகழ்வாய்
இரண்டில் எதுதான் சிறந்தது என்பதை
முடிவாய் எனக்கு விளக்கிச் சொல்கவே

பகவான் சொல்வான்

*05-02* கருமம் துறத்தல் கரும யோகம்
*206* இரண்டும் உயர்ந்த இன்பம் தருமே
இரண்டிலும் செயல்புரி யோகமே மெய்யாய்ச்
செயலைத் துறப்பதில் சிறந்த தாகுமே.

*05-03* விருப்பும் இல்லான் வெறுப்பும் இல்லான்
*207* எதிரிணைப் பொருளில் விலகியே நிற்பான்
நிலைத்த முனிவர் என்ற ழைப்பார்
தடந்தோள் வீரனே பந்தம் தனிலே
எளிதில் விடுதலை எய்திடு வானே.

*05-04* சாங்கியம் வேறு யோகம் வேறு
*208* என்று கூறுவார் சிறுவர் தாமே
முனிவரோ வேறாய்க் கூறலும் இலையே
ஒன்றிலே நிலைத்து நிற்பவர் தாமே
இரண்டின் பயன்களை எய்தலும் கூடுமே.

*05-05* சாங்கியர் எய்தும் உயர்ந்த நிலையை
*209* யோகிகள் தாமும் எய்தலும் உளதே
சாங்கியம் யோகம் ஒன்றெனக் காண்பார்
உண்மைப் பார்வை உடையார் ஆவரே.

05-06 தோள்வலி வீரனே, யோகம் இலாதே
210 துறவு எய்தலும் கடினம் ஆனதே
யோகத் திணைந்த முனிவர் தாமும்
விரைவில் பரத்தைச் சேர்தலும் உண்டே.

05-07 யோக மூலமாய்ச் சமநிலை அடைந்து
211 தாமும் தூய்மை அடைந்தே தம்மை
ஆண்டும் புலன்களை அடக்கியும் எல்லா
உயிர்க்கும் தாமே உயிராய் உள்ளுவார்
செயலைச் செய்யினும் பாதிப் பிலையே.

05-08 பார்க்கினும் கேட்பினும் தீண்டினும் முகர்ப்பினும்
212 உண்ணினும் நடக்கினும் உறங்கினும் உயிர்ப்பினும்
பொருட்களின் உண்மை அறிந்த யோகியோ
என்செயல் எதுவும் இல்லை என்னுமே.

05-09 உரைத்தல் கொடுத்தல் பிடித்தல் இமைதமை
213 திறத்தல் மூடல் முதலாம் செயல்கள்
புலன்கள் தாமே. புலனுணர் பொருள்வழி
இயங்கும் என்றே எண்ணுவர் தாமே.

05-10 பற்றைத் துறந்தே பரத்தை நினைந்தே
214 செயல்புரி வானைப் பாவம் பற்றிடா
தாமரை இலையும் தண்ணீர் போன்றே.

05-11 யோகிகள் பற்றைத் துறந்து ஆத்மத்
215 தூய்மை வேண்டி உடலால் உளத்தால்
புத்தியால் அன்றியும் புலன்கள் வழியிலும்
சென்றே செயல்களைச் செய்தலும் உண்டே.

05-12 யோகத் திணைந்து கருமப் பயனைத்
216 துறந்தார் நிலைத்த அமைதி அடைவரே
யோகத் திணையார் ஆசை தூண்டப்
பயனில் பற்றாய்த் தளையில் உழல்வரே.

05-13 மனத்தால் செயல்கள் அனைத்தும் துறந்தார்
217 உடலில் வாழும் உயர்ந்த ஆத்மா
செயல்களைச் செய்தல் செய்வித் தலின்றி
நவவாய் நகரில் இனிதாய் இயங்குமே.

05-14 செய்கை செயல்புரி கருத்தா செயலின்
218 பயனைத் துய்ப்பான் என்றே எதையும்
இறைவன் இயற்றல் இல்லை உலகிலே
எனினும் எல்லாம் இயற்கை இயக்குமே.

05-15 எவர்தம் செயலும் நல்லதோ கெட்டதோ
219 எவ்வகை யாயினும் இறைவன் ஏலான்
அறியா மையால் அறிவும் சூழவே
மரித்திடும் உயிரும் மயங்கி உளதே.

05-16 ஆத்ம அறிவால் அஞ்ஞா னமழிவோன்
220 சூரியச் சுடரொளி போன்றே வீசும்
அறிவும் பரத்தைப் பார்த்திடச் செய்யுமே.

05-17 பரத்தை நினைத்துப் பரத்திலே கலந்து
221 பரத்தில் நிலைத்துப் பரத்தைப் பக்தியால்
பணிவார் பாவம் அகன்றிடப் பெற்றே
மீளுதல் இல்லா உயர்பதம் அடைவரே.

05-18 கல்வியில் பணிவில் உயர்ந்த பிராமணர்
222 யானை பசுவும் நாயும் புலையனும்
எல்லாம் சமமென எண்ணும் முனிவரே.

05-19 மனத்தில் சமநிலை எய்தினார் தாமும்
223 உலகில் எதையும் வெற்றியும் கொள்வர்
பரமோ மாசிலாச் சமநிலை உடைத்தே
எனவே அவரும் பரத்தே நிலைப்பரே.

05-20 புத்தித் திடமுடன் கலக்கம் இலாதே
224 பரத்தே நிலைத்துப் பரத்தை அறிவார்
இனியன வருங்கால் மகிழ்தலு மின்றி
இன்னா வருங்கால் வருந்தலு மிலையே.

05-21 புறப்பொருள் தொடர்பால் பற்றுத் துறந்தார்
225 தன்னில் இன்பம் அடைந்தும் யோக
மூலமாய்ப் பரத்தில் சமநிலை எய்தியே
அழிவிலா இன்பம் அனுபவிப் பாரே.

05-22 பரிசம் தந்திடும் இன்பம், திண்ணமாய்த்
226 துன்பக் கருப்பை யாகுமே, ஏனெனில்
முதலும் முடிவும் உடையன அவையே
அறிஞர் அதனில் மகிழ்வு உறாரே.

05-23 உலகில் உயிர்தாம் உடலைப் பிரியுமுன்
227 ஆசை மற்றும் உணர்ச்சியி லுதிக்கும்
வேதனை தாங்கிக் கொள்வான் தானுமே
சமநிலை அடைய இன்பமும் உளானே.

05-24 உளத்தின் உள்ளே இன்பம் உடையான்
228 உளத்தின் உள்ளே மகிழ்ச்சி எய்தினான்
உளத்தின் உள்ளொளி எய்திய யோகியே
பரமமாயப் பரத்து அமைதி அடையுமே.

05-25 பாவமும் அழிந்து இருவினை அகன்று
229 தன்னை அடக்கி உயிர்கள் அனைத்தின்
நலம்விழை முனியுயர் அமைதி அடையுமே.

05-26 ஆசை வெறியும் அகன்றே சிந்தனை
230 அடக்கி இயல்பாய் ஆத்மா அறியும்
அறிவும் பெற்றார் அருகே உளதே
பரம பதத்து அமைதி தானே.

05-27 புறத்தொடர் பின்றிப் புருவம் இடையே
231 பார்வை நிறுத்தி நாசியின் வழியே
உட்கொளும் வெளியிடும் என்னும் இருவகை
மூச்சின் இயக்கம் சமநிலைப் படுத்தியே.

05-28 புலன்கள் மனமொடு புத்தியும் என்றுமே
232 அடக்கி விடுதலை தனிலே முனைந்து
ஆசை அச்சம் உணர்ச்சி அறவே
விடுத்த முனிவரின் விடுதலை உறுதியே.

05-29 வேள்வியும் தவமும் விரும்புவான் என்றும்
233 எல்லா உலகமும் ஆள்வான் என்றும்
எல்லா உயிரையும் நேசிப் பானென
என்னை அறிந்தால் அமைதி எய்துமே.

# அத்தியாயம் - 6

## தியான யோகம்

### பகவான் கூறுவான்

06-01 கருமப் பலனைக் கருதாக் கடமை
234 என்றே கருமம் புரிவான் தானும்
துறவியு மாவான் யோகியு மாவான்
தீயொடு செயலும் துறந்தான் அல்லனே.

06-02 துறவு என்பதே யோகம் என்றறி
235 உருவா குமெண்ணம் துறவா எவனும்
பாண்டவா, துறவி ஆவதும் இலையே.

06-03 யோகம் தேடும் முனிவர் தமக்கும்
236 கருமமே ஏற்ற வழியெனக் கூறுவர்
துறவியும் யோக அரியணை ஏறில்
சாந்தி தனையே வழியெனக் கூறுமே.

06-04 புலனுணர் பொருளிலும் கருமம் தனிலும்
237 பற்றும் உணரா எண்ணம் துறந்தார்
யோகத் திருக்கை அமர்ந்தார் என்பரே.

06-05 தன்னைத் தானே உயர்த்திட வேண்டும்
238 தன்னைத் தாழ்த்தல் தவிர்த்திட வேண்டும்
தனக்கு நண்பனும் பகைவனும் தானே.

06-06 தன்னைத் தானே வென்றான் இடத்தே
239 தானே தனக்கு நண்பனும் ஆவான்
தன்னைத் தானே வெல்லான் தனக்குத்
தானே எதிராய்ப் பகைவனும் ஆவனே.

06-07 தன்னை அடக்கி அமைதிகாண் உயர்ந்தோன்
240 தட்பம் வெப்பம் இன்பம் துன்பம்
மதிப்பு அவமதிப் பொன்றெனு எண்ணுமே.

06-08 அறிவு ஞானம் திருப்தி யுளமுனி
241 நிலைகுலை யாதே புலன்களை வென்று
கல்லும் மண்ணும் பொன்னும் ஒன்றாய்
எண்ணும் சமநிலை எய்தினர் என்பரே.

06-09 அன்பர் நண்பர் பகைவர் நடுவர்
242 அன்னியர் வெளியார் உற்றார் மற்றும்
நல்லார் பொல்லார் எல்லாம் சமமாய்
எண்ணுவார் மெய்யாய் உயர்ந்தார் ஆவரே.

06-10 தன்னை எண்ணம் தன்னை விடுத்து
243 எதிர்பார்த் தலின்றி ஆசை விடுத்து
தனியிடம் மறைவாய்த் தனித்தே இருந்து
யோகியும் என்றுமே யோகம் தனிலே
தொடர்ந்து முயன்று முனைந்து செல்கவே.

06-11 தூயதாய்த் தனக்காய்த் தனியிடத் துறுதியாய்
244 உயரம் தாழ்வு அதிகம் இலாதே
துணியும் கருமான் தோலும் தருப்பை
ஒன்றுமே லொன்றாய் விரித்துப் பரப்பி
அடுக்கியே அமைத்த ஆசனத் திருந்தே.

06-12 ஆங்கே மனத்தை ஒருமுனைப் படுத்திச்
245 சிந்தனை செயல்கள் புலன்கள் அடக்கி
இருக்கை தனிலே நிலையாய் இருந்தே
தூய்மை எய்திட இயற்றுக யோகமே.

06-13 உடலும் கழுத்தும் தலையும் நேராய்
246 அசைவு இலாதே நிலையுற நிறுத்திச்
சுற்றிலும் பார்வை சுழல விடாதே
மூக்கின் நுனி தனை நிலைத்து நோக்கியே.

06-14 சாந்தம் அடைந்து அச்சம் அகன்று
247 பிரம்மச் சரிய விரத உறுதியில்
மனத்தை அடக்கிச் சமநிலை அடைந்து
என்னை எய்திட எண்ணி முனைகவே.

06-15 மனத்தை இதுபோல் என்றும் அடக்கி
248 யோகம் ஆத்மா இணைந்த யோகி
அமைதியில் எனதுயர் இன்பம் அடைவரே.

06-16 மிகையாய் உணவை உண்பார் ஒறுப்பார்
249 மிகையாய்த் தூங்குவார் தூங்கா விழிப்பார்
அருச்சுனா, யோகம் அடையார் அறவே.

06-17 உணவில் களிப்பில் செயலில் துயிலில்
250 விழிப்பில் ஒழுங்கு உள்ளார் இடத்து
யோகம் அனைத்துத் துன்பம் துடைக்குமே.

06-18 அடக்கிய சிந்தை தன்னிலே நிறுத்தி
251 விரும்பும் பொருளில் ஆசை விடுத்தார்
சமநிலை எய்தினார் என்றே இயம்புமே.

06-19 சித்தம் அடங்கி ஆத்மா யோகம்
252 இணைந்த யோகி காற்றிலா இடத்துள
ஆடா விளக்குப் போன்றார் ஆவரே.

06-20 எதிலே ஒருவன் யோக மூலம்
253. அமைதி பெறுமோ, எதிலே ஒருவன்
தன்னிலே ஆத்மா தனையும் தானே
கண்டு திருப்தி அடையுமோ அவனுமே.

06-21 எதிலே ஒருவன் புலன்களின் அப்பால்
254 புத்தியால் பெரிதாம் இன்பம் காணுமோ
எங்கே ஒருவன் நிலைத்து உண்மையாய்
விடுத்து விலகி நில்லா தவனுமே.

06-22 எதனைப் பெற்றபின் அதினினும் உயர்ந்த
255 பயனும் வேறிலை என்று எண்ணி
எதிலே நிலைத்து நிற்பான் மிகுந்த
துயருறும் போதிலும் துவள்தலு மிலையே.

06-23 அதுவே துன்பத் தொடர்பில் விடுதலை
256 தந்திடும் யோகம் என்றழைப் பாரே
இந்த யோகமே உறுதி உணர்வு
தளரா மனத்தொடு பற்றுதற் குரியதே.

06-24 கற்பனை மூலமாய் எழுந்திடும் ஆசை
257 அனைத்தும் தயக்கம் எதுவும் இன்றியே
துறந்து எல்லாத் திசையும் எழுந்திடும்
புலன்களின் சேர்க்கை மனத்தால் அடக்கியே.

06-25 கட்டுப் படுத்திய புத்தியின் மூலம்
258 மெல்ல மெல்ல அமைதி அடைகவே
மனத்தைத் தன்னில் நிலைபெறச் செய்து
வேறு எதையும் எண்ணா திருக்கவே.

06-26 நிலையிலா தலையும் மனமும் வெளியில்
259 செல்லும் வேளை மனத்தைப் பிணித்துத்
தனது கட்டுப் பாட்டில் கொணர்கவே.

06-27 மனமும் அமைதி அடைந்து ஆசை
260 உணர்ச்சி அடங்கிப் பாவமும் அகன்று
பிரம்ம இயல்பு எய்திய யோகி
பெற்றிடும் இன்பம் பேரின் பமாமே.

06-28 இவ்விதம் ஆத்மா இணைந்த யோகியும்
261 பாவம் விலக்கிப் பிரம்மத் தொடர்பால்
எல்லை யிலின்பம் எளிதில் எய்துமே.

06-29 யோக ஆத்மச் சமநிலை பெற்றார்
262 எல்லா உயிரிலும் ஆத்மா காண்பார்
ஆத்மனில் எல்லா உயிரையும் காண்பரே
காண்பவை எல்லாம் சமமாம் என்பரே.

06-30 எங்கும் என்னைக் காண்பான் தனையும்
263 எதையும் என்னில் காண்பான் தனையும்
என்றும் நானும் கைவிடல் இல்லை
என்றும் அவனெனை விடுதலும் இலையே.

06-31 ஒன்றிலே நிலைத்து அனைத்து உயிரிலும்
264 உறையும் என்னை வழிபடும் யோகியே
எவ்விதம் வாழ்கினும் என்னுளே வாழுமே.

06-32 எங்கும் இயங்கும் ஆத்மா ஒன்றாய்
265 இன்பம் எனினும் துன்பம் எனினும்
எதிலும் சமத்துவம் காண்பான் தானே
அருச்சுனா, பரம யோகியு மாவனே.

அருச்சுனன் கூறுவான்

06-33 சமநிலை மூலமாய் எய்தலாம் என்றுநீ
266 கூறிய யோகம் இதற்கு நிலைத்த
அடித்தளம், அருச்சுனா, எனது மனத்தின்
சஞ்சல மதனால் காணேன் நானே.

06-34 கண்ணா மனமும் சஞ்சல மானதே
267 தவறும் இயல்பே, கட்டினுள் அடங்கா
மெய்யாய் வலிதாம் காற்றை வளைத்தல்
போன்றே கடிதெனக் கருதுவன் நானே.

பகவான் கூறுவான்

06-35 தோள்வலி வீரனே ஐயமும் இலையே
268 மனதை அடக்கலும் கடிதே அமைதி
இலதாம் எனினும் விருப்பு வெறுப்பு
இலாதே முயன்று அடக்கலும் கூடுமே.

06-36 தம்மை கட்டுப் படுத்திட முடியார்
269 யோகம் எய்தல் கடிதாய்க் கருதுவேன்
தம்மை கட்டுப் படுத்துவார் தாமும்
தக்க வழியில் சக்தியை இயக்கி
யோக நிலையை எய்தல் இயலுமே.

அருச்சுனன் வினவினான்

06-37 நம்பியே இருந்தும் தம்வயப் படுத்தார்.
270 மனமும் யோகம் விலகியே செல்லும்
பூரண யோகம் எய்தலின் தோல்வி
தழுவினார், கிருஷ்ணா, எவ்வா றியங்குமே.

06-38 வீரனே இரண்டு நிலையிலும் தவறிச்
271 சிதறிய மேகம் போன்றே உறுதி
இழந்து பிரம்ம நெறியில் மயக்கம்
உடையார் அழிந்து போதலும் உளதே.

06-39 எனது ஐயம் முற்றும் அகற்று
272 இதனை அழித்திடக் கண்ணா, உன்னை
ஒழிய ஒருவரும் வேறுகா ணேனே.

பகவான் கூறுவான்

06-40 தரும வழியில் செல்பவர் எவரும்
273 துன்ப வழியில் துயருறல் இல்லை
இந்த உலகிலும் இனியுள உலகிலும்
அழிவே இல்லை அவர்க்கு அன்பனே.

06-41 நல்லவை புரிந்தோர் உலகம் எய்தியும்
274 ஆண்டுகள் பலவும் ஆங்கே வாழ்ந்தும்
யோகம் பிறழ்ந்தார் தூய செல்வம்
உடையார் மனையில் மீண்டும் பிறப்பரே.

06-42 அறிவுடை ஞானி குடியில் பிறக்கும்
275 அத்தகைப் பிறவி இத்தரை மீதினில்
கிடைத்தல் மிகவும் கடின மானதே.

06-43 குருகுலக் கொழுந்தே ஆங்குமுன் பிறவிக்
276 குணங்கள் பெற்றும் பின்பவை மூலம்
மீண்டும் பூரணம் எய்திட முயலுமே.

06-44 பண்டைப் பழக்கம் தடுத்திட முடியா
277 இழுத்துச் சென்றிடும் இவர்தமை அப்பால்
யோகம் அறிந்திட விரும்பி யோகமும்
தேடுவார் பிரம்ம உலகம் கடப்பரே.

06-45 பாவம் அகன்று முனைப்பாய் முயன்று
278 பற்பல பிறவியால் பக்குவ மெய்தி
யோகியும் பரகதி எய்தலும் உண்டே.

06-46 யோகியும் தபசியின் உயர்ந்தார் தாமே
279 அறிஞரில் அவரும் சிறந்தார் என்பரே
கரும வீரரில் உயர்ந்தவ ராவராம்
யோகியும் ஆகுக, அருச்சுனா, நீயுமே

06-47 இதயக் கமலம் என்னிலே நிறுத்தி
280 முழுதும் நம்பியே என்னை ஏத்துவான்
தமையே, யோகிகள் தம்மில் பூரணச்
சமநிலை எய்தினார் என்றுநான் கருதுமே.

# அத்தியாயம் - 7

## அறிவும் அறிவால் அறிந்த பொருளும்

### பகவான் கூறுவான்

07-01 பார்த்தா, மனத்தை என்னிலே பிணித்து
281 யோகமும் புரிந்தே எனைப்புகல் அடைந்து
ஐயம் இலாதே முழுதும் எனையே
அறியும் வழிதனை என்னிடம் கேட்கவே.

07-02 அந்த அறிவும் ஞானமும் உனக்கு
282 முற்றும் உரைப்பேன், அறிந்த பின்னர்
மேலும் அறிந்திட எதுவுமே இலையே

07-03 ஆயிரம் மனிதரில் அபூர்வ மாகவே
283 ஒருவரே பூரணம் எய்திட முயல்வார்
முயன்று வெற்றி பெற்றார் தம்மில்
மெய்யாய் என்னை அறிவார் ஒருவரே.

07-04 நிலமும் நீரும் நெருப்பும் காற்றும்
284 வானும் மனமும் புத்தியொ டகந்தை
என்பவை எட்டும் எனது குணங்களே.

07-05 இவைதாம் தாழ்வாம், உயர்ந்த எனது
285 இதர இயல்பும் அறிந்து கொள்கவே
உயிரணு அவையாம் தோள்வலி யானே
உலகும் அவற்றால் தாங்குதல் பெறுமே.

07-06 எல்லா உயிர்க்கும் இதுகரு என்றறி
286 உலக முழுதின் ஆக்கம் அதுபோல்
அழிவின் மூலமும் நானென அறிகவே.

07-07 என்னிலும் உயர்ந்த பொருட்கள் இல்லை
287 நூலில் கோத்த முத்துகள் போன்று
எல்லாம் என்னிலே கோக்கப் பட்டவே.

07-08 குந்தி மகனே நீரின் சுவைநான்
288 சூரிய சந்திர ஒளியும் நானே
வேதம் அனைத்தின் பிரணவச் சொல்நான்
வா்னொலி மனித ஆண்மை நானே.

07-09 மண்ணின் நறுமணம் நானே, நெருப்பின்
289 பேரொளி நானே உயிரினம் அனைத்தின்
உயிரும் தபசிதம் தவமும் நானே.

07-10 உயிர்களின் அழிவிலா விதையும் நானே
290 புத்தி உடையார் புத்தியும் நானே
உயர்ந்த பொருட்களில் உயர்ந்ததும் நானே.

07-11 ஆசை பாசம் அகன்ற வல்லவர்
291 வலிமை, உயிர்கள் இடத்தில் கடமை
மீறிடா ஆசை அனைத்தும் நானே.

07-12 சத்துவ இராசச தாமசக் குணங்கள்
292 என்னிலே உதித்தன என்றுநீ அறிந்திடு
அவற்றிலே நானிலை அவையுள என்னிலே.

07-13 இந்த முக்குண இயல்பில் மயங்கிய
293 உலகும், இதனில் உயர்ந்து சிறந்த
அழிவிலா என்னை அறிகி லாதே.

07-14 முக்குணத் திலான எனது தெய்வ
294 மாயை துளைத்தல் கடிதே என்னை
அடைவார் இந்த மாயை கடப்பரே.

07-15 தீயவை புரிவார் மயக்கம் உடையார்
295 இழிந்த மனிதர் அழியப் பெற்றார்
மாயை யிலறிவு அழியப் பெற்றார்
அசுரக் குணங்களைத் தழுவுவார் தாமே.

07-16 என்னை வழிபடும் நல்லோர் நால்வகை
296 துயரில் உழல்வார், அறிவைத் தேடுவார்
சுயநலம் உடையார், ஞானிமு தலாமே.

07-17 இவர்தமில் யோகம் தொடர்ந்து நிலைத்து
297 ஒன்றை வழிபடும் ஞானியே சிறந்தார்
அறிஞர் அவர்க்கும் நான்மிக இனியன்
அவரும் எனக்கு அன்பரும் ஆவரே.

07-18 எல்லார் தாமுமே நல்லார் எனினும்
298 ஞானியை நானெனக் கருதும் நானே
ஞானியும் உறுதி உளத்தொடு எனையே
தன்னுயர் இலட்சிய வழியாய்க் கருதுமே.

07-19 அறிவுசால் ஞானியும் பிறப்பின் இறுதியில்
299 எல்லாம் வசுதேவ் என்றே எனைச்சரண்
புகுமே அத்தகு மகானும் அரிதே.

07-20 ஆசை வழியில் அறிவைச் செலுத்துவார்
300 தத்தமக் குரிய குணத்தின் வழியில்
விதவித வெளிப்புற முறைகள் பயின்றே
இதர தெய்வம் வழிபடு வராமே.

07-21 பக்தன் ஒருவன் நம்பியே எத்தகை
301 வடிவில் வழிபட விழையினும் அவனது
அசையா நம்புதற் கேற்ற வாறே
அவனுக் கருளும் நானும் புரிவனே.

07-22 அத்தகை நம்பிக் கையுட னத்தகு
302 தேவதை வழிபட அவனது விருப்பம்
அவற்றில் இருந்தே நிறைந்திடப் பெறுவான்
எனினும் பயனை அளிப்பவன் நானே.

07-23 சிறுமதி உடையார் பெற்றிடும் பயனும்
303 அளவும் உடைத்தே, தேவரைத் தொழுவார்
தேவரைச் சேர்வர் தாமே, எனினும்
எனது பக்தர் என்னிடம் வருவரே.

07-24 உருவிலான் உருவுளான். என்றே என்னை
304 அறிவிலார் எண்ணுவர் எனது உயர்ந்த
அழிவிலா உன்னத நிலையறி யாரே.

07-25 என்னுடை யோகமா யையால் சூழ்ந்தே
305 எவர்க்கும் நான்வெளி யாவதும் இல்லை
பிறப்பும் அழிவும் இல்லா என்னை
மயங்கிய உலகும் அறிவதும் இலையே.

07-26 கழிந்தன நிகழ்வன வருவன அறியும்
306 என்னை, அருச்சுனா, அறியார் எவருமே.

07-27 விருப்பில் வெறுப்பில் விளைந்த எதிரிணை
307 மாயை யதனால் உயிர்கள் அனைத்தும்
மாயை தனிலே மயங்கிய உலகில்
பார்த்தா, முழுதும் இயங்குதல் உளதே.

07-28 நல்லன செய்யும் தூயோர் பாவம்
308 முடிவுறப் பெற்றும் எதிரிணை குணங்களின்
மயக்கம் தனிலே விடுதலை அடைந்தும்
நோன்பில் உறுதியாய் என்னைத் தொழுவரே.

07-29 எனைச்சரண் புகுந்தார் பிறப்பிலும் இறப்பிலும்
309 விடுதலை வேண்டியே பிரம்ம ஆன்மா
முற்று ஞானமும் செயல்களும் அறிவரே.

07-30 பூத ஞானம் தேவ ஞானம்
310 தியாக ஞானம் என்றெனை அறிவார்
மனத்தில் சித்தம் அடைந்தவ ராகியே
இறுதி யிலேனும் என்னை அறிவரே.

# அத்தியாயம் - 8

## உடலும் உயிரும் இயங்கும் விதம்

அருச்சுனன் வினவினான்.

*08-01* *அந்தப் பிரம்ம மென்பது என்ன?*
*311* *ஆத்ம ஞானம் என்பது என்ன?*
*கருமம் என்பது என், புரு டோத்தம*
*பூத ஞானம் என்பதும் என்ன*
*தேவ ஞானம் என்பதும் என்னே?*

*08-02* *உடலில் யாக ஞானம் என்பது*
*312* *என்? மது சூதனா எத்தகை இறுதியில்*
*தனையடக் கினானை எவ்விதம் அறிவரே.*

*08-03* *அழிவிலாப் பரமே பிரம்மம் ஆகுமே*
*313* *அதனியல் பறிதலே ஆத்ம ஞானம்*
*உயிரின் பிறப்பின் இயக்கம் கருமமே.*

*08-04* *உயிர்வாழ் மனிதரில் உயர்ந்தாய், எனது*
*314* *அழிவும் இயற்கை சார்ந்ததே பூத*
*ஞானம் உயிர்தரும் தத்துவம் அறிதல்*
*தேவ ஞானம் உடலுயிர் தத்துவம்*
*நானென அறிதலே யோக ஞானமே.*

*08-05* *உடலை விடுத்துச் செல்லும் இறுதிக்*
*315* *காலத் திலேனும் எனையே எண்ணுவார்*
*எனையே அடைவார் ஐயமும் இலையே.*

*08-06* *உடலை விடுக்கும் இறுதியில் எவரும்*
*316* *எதனை நினைக்கினும் நினைத்த அதையே*
*இயல்பிற் கேற்ப என்றும் பெறுவரே.*

08-07 எனவே எனையே என்றும் நினைத்தே
317 போரிடு மனமும் புத்தியும் என்னிலே
வைத்திடில் ஐயமின் றடைவாய் எனையே.

08-08 சிந்தனை வேறே நினைந்து அலையார்
318 தொடர்ந்து நிலையாய்த் தியானம் முயன்றே
யோகச் சமநிலை எய்தினார் உயர்ந்த
தெய்வப் பரனைப், பார்த்தா, அடைவரே.

08-09 முன்னோன் முற்றும் அறிவோன் எல்லாம்
319 ஆள்வான் நுண்ணிதில் நுண்மை யாவான்
எல்லாம் தாங்கிக் கற்பனைக் கெட்டா
உருவுளான் இருளின் அப்பால் சூரியன்
போல் ஒளிர் வானைச் சிந்திப் பானே.

08-10 இறுதிக் காலம் அசையா மனத்துடன்
320 மூச்சைப் புருவ நடுவே நிறுத்தி
யோகப் பலத்தில் புத்தியில் நிலைத்தே
நிற்பார் தெய்வ பரனை அடைவரே.

08-11 வேதம் அறிந்தார் எதனை அழிவிலா
321 தென்பரோ ஆசை அகன்றுதன் வயமாய்
எதனை அடையுமோ எதனை விரும்பிப்
பிரம்மச் சரியம் நோற்குமோ அவ்வழி
தனைநான் சுருக்கி உரைப்பேன் உனக்கே.

08-12 வாயில் அடைத்தும் மனத்தை இதயத்(து)
322 அடைத்தும் உயிர்மூச் சினைத்தன் தலையில்
நிறுத்தி யோக மூலமாய் முனைந்தே.

08-13 'ஓம்' எனும் ஓரசைப் பிரம்மம் ஓதியே
323 என்னை நினைந்தே உடலைத் துறப்பார்
உயர்ந்த பரமப் பாதை செல்வரே.

08-14 என்றும் எனையே நினைந்து வேறெதும்
324 நினையா யோகமே என்றும் நிற்கும்
யோகியால் நானும் எய்திடல் எளிதே.

08-15 என்னை அடைந்தே இந்த மகான்கள்
325 பின்னர் துன்ப மயமாம் இடத்தே
மீண்டும் பிறவி அடைவதும் இலையே
உயர்பேர் இன்பம் பெற்றவர் ஆவரே.

08-16 பிரம்ம உலகம் முதலாம் எல்லா
326 உலகும் வந்திடும் சென்றிடும் அருச்சுனா
என்னிடம் வருவார் பிறவிபின் பெறாரே.

08-17 பிரம்ம ஒருபகல் ஆயிர யுகமாம்
327 ஆயிர யுகமே ஓரிர வாகும்
என்பதை அறிவார் இராப்பகல் அறிவரே.

08-18 உருவுள எல்லாம் பகல்வரு காலம்
328 அருபத் திருந்தே தோன்றி வெளிவரும்
இராவரும் காலம் அருபம் தனிலே
அவையும் கரைந்து மறைதலும் உளவே.

08-19 இந்த உயிரினைத் தொகுதிகள் பலவும்
329 இராவரு காலம் மீண்டும் மீண்டும்
மறைந்து விதியின் முறையே பகல்வரு
காலம் வெளியே வருதலும் உளவே.

08-20 அருபம் தனக்கே அப்பால் அருபமாய்
330 நிலையா னதொன்று உறுதியாய் உளதே
உயிரினம் அழியினும் அழிந்திடா அதுவே.

08-21 அருபம் அதையே அழியா தென்பர்
331 உயர்ந்த மார்க்கம் என்றதைக் கூறுவர்
அதனை அடைவார் மீள்வதும் இல்லை
இதுதான் என்னுயர் பரம பதமே.

08-22 பார்த்தா, உயர்ந்த பரம்பொருள் அவனை
332 அடைவர் தளர்வில் பக்தி தனிலே
அனைத்து உயிரினம் அவனிலே உறையும்
அவனும் எங்கும் நிறைந்து உளானே.

08-23 யோகிகள் மாண்டபின் மீண்டிடா வேளை
333 யோகிகள் மாண்டபின் மீண்டிடும் வேளை
உனக்கு உரைக்குநான் பாரதக் குரிசிலே.

08-24 நெருப்பும் ஒளியுடன் பகலும் சேர்ந்த
334 ஆறுமாதம் வடதிசைப் பயணம்
செல்லும் வளர்பிறை பதினைந் துநாளில்
சென்று பிரம்மம் தனையே அறிந்த
மனிதர் தாமும் பிரம்மம் சேர்வரே.

08-25 புகையொடு இரவும் சேர்ந்த ஆறு
335 மாதம் தென்திசைப் பயணம் செல்லும்
தேய்பிறை பதினைந் துநாளில் சென்றிடும்
யோகிகள் மதியொளி பெற்றும் மீள்வரே.

08-26 ஒளிவழி இருள்வழி என்று இருவகை
336 நிரந்தர வழிகள் உளதாம் உலகில்
ஒருவழிச் செல்வார் மீள்வார் மறுவழிச்
செல்வார் மீள்தல் இலாரெனும் வகையே.

*08-27* *இரண்டு வழிகளும் அறிந்த யோகிகள்*
*337* *மயங்குதல் இலையே எனவே பார்த்தா*
*யோகம் தனில்நீ நிலைத்து நிற்கவே.*

*08-28* *வேதம் கூறிடும் வேதத்தில் தவத்தில்*
*338* *தானம் நற்செயல் விளைநற் பலன்களை*
*அறிந்த யோகிகள் அவைதமைக் கடந்தே*
*ஆதியாம் உயர்ந்த பரமனை அடைவரே.*

# அத்தியாயம் - 9

## உயர்ந்த அறிவும் ஆழ்ந்து அறியத்தக்க உண்மையும்

பகவான் கூறுவான்

*09-01* பொறாமை இல்லா உனக்கு உரைப்பேன்
*339* அறிவும் ஞானமும் இணைந்த ரகசியம்
அறியின் பாவ விடுதலை பெறுமே.

*09-02* அரச வித்தை அரச ரகசியம்
*340* தூய்மை செய்வதில் உயர்வாம் அனுபவ
அறிவால் தெரிவது தருமம் சார்ந்தது
செய்வதற் கெளியது அழிவில தாமே.

*09-03* இந்த அறிவில் நம்புதல் இல்லா
*341* மனிதர் என்னை அடையார் மீண்டும்
மரண வழியாய் உலகை அடைவரே.

*09-04* உலகம் எனது அருப இயல்பில்
*342* எங்கும் சூழுறும் அனைத்து உயிரின்
வேர்கள் என்னிலே, நானிலை அவையிலே

*09-05* எனினும், என்னில் உயிரின் வேரிலை
*343* பார்நீ, எனது அரச யோகமே
உயிர்களைத் தாங்கினும் நானிலை அவற்றிலே
அனைத்து உயிரின் கருத்தா நானே.

*09-06* எங்கும் இயங்கும் பலத்த காற்று
*344* ஆகா யத்து இருத்தல் போன்றே
உயிரெல்லாம் என்னில் இருப்பதை அறிகவே.

09-07 குந்தி மகனே, உலகின் ஊழிக்
345 காலம் உயிர்கள் என்தாள் எய்தும்
மீண்டும் படைப்பது கற்பக் காலமே

09-08 நான்என் மறைந்த பிரகிரு திமூலமாய்
346 உயிர்களை மீண்டும் மீண்டும் என்வசம்
இழந்தே இயற்கைச் சக்தியில் படைப்பனே.

09-09 தனஞ்சய, நானுமே உயர்ந்தே இருந்து
347 செயலில் பற்றின் றிருப்பதால் இந்தச்
செயல்கள் என்னைப் பிணிப்பதும் இலையே.

09-10 குந்திக் கொழுந்தே, என்பார் வையிலே
348 இயற்கை படைக்கும் சராசரம் தமையே
இதனால் உலகும் சுழலுதல் உளதே.

09-11 மனித உடலிலே மயங்கும் அறிவிலார்
349 உயிரின் தலைவனாம் என்னை மதியார்
எனதுபே ராற்றலை அறியார் தாமே.

09-12 வீண்ஆ சையுளார் வீண்செய லாளர்கள்
350 வீணறி வாளர் அறிவிலார் மயக்குறு
கொடிய அசுரச் சக்தியைச் சார்ந்தே.

09-13 மகான்கள் உறுதியாய் எனது தெய்வப்
351 பண்பில் கலந்து தளர்விலா மனத்தொடு
பணிந்து உயிர்களின் அழிவிலா மூலம்
நானென அறிதலும், பார்த்தா, உண்டே.

09-14 என்றும் என்புகழ் போற்றி நோன்பில்
352 உறுதியாய் முயன்றும் என்முன் தொழுதும்
பக்தியால் சமநிலை அடைந்தும் பணிவரே.

09-15 ஞானமாம் வேள்வியால் வேட்டுமே சிலரும்
353 என்னை ஒன்றே என்றும், எங்கும்
இயங்கும் பலவாம் என்றும் தொழுவரே.

09-16 ஹோமமும் நானே யாகமும் நானே
354 பிதிர்கள் தம்மின் பிண்டமும் நானே
உயிர்தரும் மருத்துவ மூலிகை நானே
மந்திரம் நானே நெய்யும் நானே.

09-17 உலகின் தந்தை தாயும் நானே
355 மூதா தைநான் தாங்கும் துணைநான்
புரிதகு புனிதன் பிரணவச் சொல்லும்
சாம,ரிக் யசுரெனும் வேதமும் நானே.

09-18 பார்த்தா உலகின் பாதை நானே
356 தலைவன் ஆதி அந்தம் அடித்தளம்
நிதியறை அழியா விதையும் நானே.

09-19 வெப்பம் நான்தரும், மழையைத் தருவதும்
357 தடுப்பதும் நானே, மரணமும் அமிர்தமும்
உள்ளதும் இல்லதும் எல்லாம் நானே.

09-20 மூன்று வேதமும் அறிந்தார் சோம
358 பானம் பருகிய பாவமில் தூயோர்
வேள்வியால் என்னை வணங்கிமே லுலகு
வேண்டி என்னைப் போற்றவா னுலகு
எய்தித் தேவர் போகமும் துய்ப்பரே.

09-21 விரிந்து பரந்த வானகப் போகம்
359 துய்த்துப் புண்ணியம் தீர்ந்தபின் மீண்டும்
வேதம் கூறும் நல்வழி நடந்தார்
ஆசை ஆசை யெனாழ்ந்து உழல்வரே.

09-22 நினைப்பு வேறு இலாது எனையே
360 என்றும் புலன்களை அடக்கிப் பணிவார்
தமக்கு முழுதும் காப்பும் அளிப்பனே.

09-23 இதர தெய்வம் முழுதும் நம்பியே
361 வழிபடும் பக்தனும் குந்தியின் மைந்தனே
முன்னோர் முறைக்கு முரணே எனினும்
எனையே தொழுவார் என்பார் தாமே.

09-24 நானே வேள்விகள் அனைத்தும், மெய்யா
362 அனுப விக்கும் தலைவன் தானே
எனினும் என்னை அறியார் மெய்யாய்
எனவே அவர்தாம் வீழ்வரே உலகிலே.

09-25 தேவரைத் தொழுவார் தேவரை அடைவரே
363 பிதிர்களைத் தொழுவார் பிதிர்தமை அடைவரே
பூதமே தொழுவார் பூதமே எய்துவர்
என்னைத் தொழுவார் என்னிடம் வருவரே.

09-26 இலையோ மலரோ பழமோ நீரோ
364 பக்தியால் எவர்தாம் அளிப்பினும் அதையே
பக்தியால் அளிப்பதால் ஏற்றுக் கொள்வனே.

09-27 எதைநீ செய்யினும் எதைநீ உண்ணினும்
365 எதைநீ அளிக்கினும் எதைநீ கொடுக்கினும்
எதைநீ தவத்திற் கென்றே செய்யினும்
எனக்கே அர்ப்பணம் என்றதைச் செய்கவே.

09-28 நல்லவை தீயவை தந்திடும் செயல்களின்
366 தளையில் நின்றும் விடுதலை பெறுவாய்
துறவெனும் யோகச் சமநிலை பெற்றும்
விடுதலை பெற்றும் என்னிடம் வருமே.

09-29 எல்லா உயிர்க்கும் நான்சம மாகுமே
367 வேண்டுவோர் வேண்டார் என்பார் எனக்கிலை
உண்மைப் பக்தியில் என்னைத் தொழுவார்
என்னிலே இருப்பார் நானுளன் அவரிலே.

09-30 பாவியில் கொடிய பாவியே ஆயினும்
368 தளரா மனத்தோடு என்னைக் தொழுதால்
நல்வழி நடக்கமு யலும்நல் லாரே.

09-31 விரைவில் அவனும் கடமை உணர்வில்
369 நிரந்தர சக்தி அடையும் பார்த்தா
என்னுடைப் பக்தன் என்றுமே அழிவிலான்
என்பதை உறுதியாய் நீயுமே அறிகவே.

09-32 பாவிகள் பெண்கள் வைசியர் சூத்திரர்
370 யாவரே ஆயினும் என்னைப் பணிவார்
பார்த்தா, சிறந்த மார்க்கம் செல்வரே.

09-33 எனவே, புனிதப் பிராமணர் மற்றும்
371 பக்த இராஜ ரிஷிகள் நிலைதான்
என்னே, நிலையிலா மகிழ்விலா உலகில்
பிறந்த நீயுமே என்னைப் பணிகவே.

09-34 மனத்தை என்னிலே வைத்தே எனது
372 பக்தன் ஆகுக எனக்கே அர்ப்பணி
என்முன் நீயுமே விழுந்தே தொழுதிடு
ஆத்ம சக்திநீ அடைந்து எனையே
உயர்ந்த கதியாய் என்னிடம் வருமே.

# அத்தியாயம் - 10

## இறைவன் உறைவிடம்

பகவான் கூறுவான்

10-01 பெருந்தோள் வீரனே மீண்டும் எனது
373 உயர்ந்த உரையை கேள்நீ அன்பனே
உன்னலம் கருதியே உரைப்பேன் உனக்கே.

10-02 தேவரின் தொகுதியும் பெருந்தவ முனிவரும்
374 எனது ஆதி அறியா வானவர்
முனிவர் தொகுதியின் மூலமும் நானே.

10-03 என்னைப் பிறப்பிலான் மூலம் இல்லான்
375 உலக நாயகன் என்றறி மனிதனும்
மரணம் உள்ளாரில் மயக்கம் இலனாய்ப்
பாவம் அனைத்தும் விடுதலை பெறுமே.

10-04 ஞானம் புத்தி மயக்க மின்மை
376 பொறையே உண்மை அடக்கம் அமைதி
இன்பம் துன்பம் இருத்தல் இலாதல்
அச்சம் தைரியம் என்பவை எலாமே.

10-05 தொல்லை யின்மை நடுநிலை திருப்தி
377 தவமொடு தருமம் பெருமை சிறுமை
என்னில் உதித்த உயிரின் குணங்களே.

10-06 மகிரிஷி எழுவர் சனாதனர் நால்வர்
378 மனுக்கள் என்மன இயல்பொடு பிறந்தார்
இவரில் இருந்தே இவ்வினம் உதித்ததே.

10-07 எனது இந்த மகிமை யோகம்
379 மெய்யாய் அறிவார் ஐயம் இன்றியே
அசையா யோகம் அமர்ந்தி ருப்பரே.

10-08 நான்தான் அனைத்தின் தோற்ற கருத்தா
380 என்னில் இருந்தே இயங்கும் எல்லாம்
என்பதை அறிந்த அறிஞர் தம்வயம்
ஆகியே அன்புடன் எனையே ஏத்துமே.

10-09 சித்தம் என்பால் செலுத்தி உயிரை
381 என்னிலே பதித்து ஒருவரை ஒருவர்
ஒளிபெறச் செய்தும் என்றும் எனையே
இயம்புவார் இன்பமும் திருப்தியும் அடைவரே.

10-10 என்றும் யோகமே நிலைத்து அன்பொடு
382 பணிவார் தமக்கும் புத்தி யோகம்
நானுமே நல்கும் அதனைக் கொண்டே
அவரும் என்னிடம் வருவார் தாமே.

10-11 அவரின் இதயத் திருந்தே அவர்பால்
383 இரக்கம் கொண்டுநான் அறியா மையின்
இருளை அறிவொளி விளக்கால் அழிப்பனே.

அருச்சுனன் கூறுவான்

10-12 பரம்பொருள் நீயே பரம்பதம் நீயே
384 உயர்ந்த தூய்மை நீயே தெய்வப்
புருடன் என்றும் நீயே தேவரின்
தேவன் பிறவான் தலைவனும் நீயே.

10-13 முனிவர் எல்லாம் ஏத்துவார் உனையே
385 நாரதர் முனிதேவ் அதிதர் தேவலர்
வியாசர் இதுபோல் புகழ்வார் இங்கும்
அதையே எனக்கும் கூறுவாய் நீயே.

10-14 நீசொல் வதெல்லாம் மெய்யென நம்புவேன்
386 எனினும் கேசவா உனது உருவமோ
தானவர் தேவரும் அறியார் எவருமே.

10-15 புருடரில் உத்தமா உன்னை மெய்யாய்
387 நீயுமே அறிவாய் உயிர்களின் ஆதிநீ
தலைவன் நீயே தேவரின் தேவனும்
நீயே உலகை ஆள்வோன் நீயே.

10-16 உலகெலாம் நிறைந்த தெய்வப் பெருமை
388 தனையே ஒளிவு இன்றி உரைக்கவே.

10-17 யோகியே உனைநான் அறிதல் எங்ஙனம்
389 நிலைத்த தொடர்ந்த தியான மூலமா
எதுவாய் எந்த வகையில் உன்னை
நானும் எண்ணிட வேண்டும் தேவனே.

10-18 சனார்த்தனா உனது பெருமை யோகம்
390 விரிவாய் மீண்டும் எனக்குநீ கூறிடு
உயிரினை ஊட்டுமுன் கூற்றை எத்தனை
முறைதான் கேட்பினும் தெவிட்டா தனவே.

பகவான் கூறுவான்

10-19 அருள்நீ பெறுவாய் எனது தெய்வப்
391 பெருமை தன்னுயர் குணத்தை உரைப்பேன்
குருகுலக் கொழுந்தே ஈறிலா விவரமே.

10-20 எல்லா உயிரின் இதயத் திருக்கும்
392 ஆத்மா நானே எல்லா உயிரின்
முதல்நடு முடிவும் பார்த்தா நானே.

10-21 ஆதித் தரில்நான் விஷ்ணு ஒளிகளில்
393 ஒளிவிடு ஞாயிறு காற்றிலே மரீசி
நட்சத் திரங்களில் சந்திரன் நானே.

10-22 வேதங் களில் சாமம் நானே
394 தேவரில் வாசவன் நானே புலன்களின்
மனமும் உயிர்கள் புத்தியும் நானே.

10-23 உருத்தி ரர்களில் சங்கரன் நானே
395 இயக்கர் அரக்கரில் குபேரன் நானே
வசுக்கள் தம்மில் அக்கினி நானே.
உயர்ந்த மலைகளில் மேருவும் நானே.

10-24 குடும்பக் குருக்கள் தலைவன் பிரகஸ்
396 பதியும் நானே படைத்தலை வரிலே
கந்தன் நானே நீர்நிலை களிலே
கடலும் நானே என்றறி நீயே.

10-25 மகிரிஷி களிலே பிருகும் நானே
397 சொற்கள் தம்மில் ஓம் எனும் ஓரசைப்
பிரணவம் யாக மவுன ஜபமும்
அசைவிலாப் பொருளில் இமயமும் நானே.

10-26 மரங்களில் அரசும் ரிஷிகளில் நாரதர்
398 கந்தர் வர்களில் சித்திர தன்நான்
சித்தர் களிலே கபிலனும் நானே.

10-27 அசுவங் களில் அமிர் தத்துப் பிறந்த
399 உச்சைச் சிரவம் யானை களில்நான்
ஐரா வதமே மனிதரில் மன்னனே.

10-28 ஆயுதங் களில்நான் வச்சி ராயுதம்
400 பசுக்களிலே நான் காம தேனு
பிறப்பின் கருத்தா மன்மதன் நானே
அரவங் களிலே வாசுகி நானே.

10-29 நாகங் களில்நான் அனந்தன், வருணன்
401 நீர்வாழ் வோரிலே, பிதிர்களில் நானே
அரியமான், ஆள்வரில் யமனும் நானே.

10-30 அசுரர் களின்நான் பிரக லாதன்
402 கணிப்பா னரில்நான் காலம், விலங்கில்
சிங்கம், பறவை களில்நான் கருடனே.

10-31 தூய்மை செய்திடும் காற்றும் நானே
403 வீரர் தம்மில் இராமன் நானே
மீனினம் தனிலே சுறாவும் நானே
நதிகளில் புனித கங்கை நானே.

10-32 படைப்பில் ஆதியும் அந்தமும் நடுவும்
404 நானே, விஞ்ஞா னத்தில் ஆத்ம
வித்தை நானே, நாவன் மையிலே
வல்லவன் பேச்சும், அருச்சுனா, நானே

10-33 எழுத்துக் களில்நான் அகரம், இணைக்கும்
405 இரண்டு சொற்கள் நானே, என்றும்
நிலைத்து நிற்கும் காலமும் நானே
திக்குகள் பார்த்துத் தாங்குவன் நானே.

10-34 எல்லாம் விழுங்கி அழிக்கும் சாவும்
406 இனிவரும் அனைத்தின் ஆதியும் நானே
பெண்மைக் குணங்களின் புகழும் செழிப்பும்
பேச்சும் நினைவும் அறிவும் நிலைத்த
நிறையும் பொறையும் எல்லாம் நானே.

10-35 தோத்திரப் பாக்களில் பிரகத் சாமனே
407 சந்தங் களில்கா யத்திரி சந்தமே
மாதங் களில்நான் மார்கழி ஆவேன்
பருவங் களிலே வசந்தம் நானே.

10-36 வஞ்சகச் சூதும் ஒளியுளார் உயிரொளி
408 நானே, வெற்றியும் உறுதியும் நானே
உண்மை யாளர்தம் உண்மை நானே.

10-37 விருஷ்ணுக் குலத்தின் வசுதேவ் நானே
409 பாண்டவர் தம்மில் தனஞ்சயன் நானே
முனிவர் இடையே வியாசன் நானே
கவிஞரில் சுக்கிரக் கவியும் நானே.

10-38 மன்னர் தம்மில் செங்கோல் நானே
410 வெற்றி விழைவார் நீதியும் நானே
இரகசி யம்தனில் மவுனம் நானே
அறிவுடை யோர்தம் அறிவும் நானே.

10-39 எத்தகை உயிர்களின் விதையும் நானே
411 என்னைத் தவிர்த்த சராசரம் இலையே

10-40 பார்த்தா, எனது தெய்வச் சக்தி
412 முடிவிலா, இதுவரைக் கூறின வரம்பில்
பெருமை யில்சிறு எடுத்துக் காட்டே.

10-41 பெருமை உடையன நல்லன அழகும்
413 மிளிர்வன பலமுள என்பவை எல்லாம்
எனது பெருமை யின்சிறு கூறே.

10-42 விவரம் இவையால் நீபெறும் அறிவும்
414 என்ன அருச்சுனா, எனது ஒருசிறு
கூற்றால் இந்த உலகம் அனைத்தும்
ஊடு ருவியே நிலைத்து நிற்பனே.

# அத்தியாயம் - 11

## பேரண்ட நாயக தரிசனம்

அருச்சுனன் கூறினான்

11-01 ஆத்மா வின்உயர் இரகசி யமதனை
415 கருணை யால்நீ உரைத்தாய் அதனால்
எனது மயக்கம் அகன்று மறைந்ததே.

11-02 கமலக் கண்ணா உயிர்களின் தோற்றம்
416 மறைவு அழிவிலாப் பெருமை நீயும்
விரிவாய் உரைக்கக் கேட்டேன் நானே.

11-03 ஏ, பரந் தாமா உனைநீ விளக்கல்
417 போல்உன் பேருருக் கண்டிட விழைவனே.

11-04 இறைவா யோக நாயகா என்னால்
418 உனது உருவைக் காணலா மென்றிடில்
அழிவிலா உருவைக் காட்டி அருள்கவே

பகவான் கூறுவான்

11-05 பார்த்தா, எனது தெய்வ உருவை
419 நூறு மடங்காய் ஆயிர மடங்காய்
வகைபல நிறம்உரு பலபார் நீயே.

11-06 ஆதித் யர்களில் வசுக்கள் அசுவினி
420 இருவர் மற்றும் மருத்துகள் அனைவரும்
இதுவரை கண்டிரா விந்தை பலவும்
பார்த்தா நீயும் பார்த்திடு வாயே.

11-07 உலகம் முழுதும் சராசரம் அனைத்தும்
421 ஒன்றாய் எனது உடலில் நிற்பதும்
பார்க்க விரும்பும் அனைத்தும் இங்கே
பார்த்தா இன்றே பார்த்திடு நீயே.

11-08 என்னை உனது ஊனக் கண்ணால்
422 கண்டிட முடியா, ஞானக் கண்நான்
தரும்என் ராஜ யோகம் பார்க்கவே

சஞ்சயன் கூறினான்

11-09 மன்னா, யோகத் தலைவன் அரியுமே
423 இவ்வா றுரைத்துத் தனது உன்னத
இறைஉரு தனையே காட்டி அருளுமே

11-10 அநேக வாய்கள் அநேகக் கண்கள்
424 அநேக அற்புதக் காட்சிகள் அநேக
தெய்வ நகையொடு படைபல ஏந்தியே

11-11 தெய்வக் கழுத்தணி ஆடை அணிந்தும்
425 வாசனைத் திரவியம் பூசப் பெற்றும்
அளப்பதற் கரியதாம் அற்புதக் கடவுள்
திசைகள் எங்கும் முகங்களாய்த் தோன்றவே

11-12 ஆயிரம் சூரியன் கதிர்களை ஒன்றாய்
426 வானிலே வீசிடும் ஒளியே மகானின்
பெருமை தனையே பிரதிப லிக்குமே.

11-13 தேவ தேவனின் உடலது தனிலே
427 உலகம் முழுதும் கூறு பலவாய்
ஒன்றாய் நிற்பதைப் பாண்டவன் பார்க்குமே

11-14 வியம்பும் எய்திட உரோமம் சிலிர்த்திடப்
428 பேரொளி முன்தன் தலைதனைச் தனஞ்சயன்
தாழ்த்திக் கரங்கள் கூப்பிக் கழலுமே

அருச்சுனன் கூறுவான்

11-15 கடவுளே, உன்னுடல் தனில்நான் தேவர்
429 பலவகை உயிரினத் தொகுதி பலவும்
தமது தனிக்குறி யோடும் தாமரை
மலர்மேல் பிரம்மன் தனையும் தெய்வ
முனிவர் அரவம் தமையும் காண்பனே.

11-16 வாய்கள் கண்கள் கரங்கள் மார்புகள்
430 கணக்கிலா அளவிலா, உனது உருவே
எங்குமே காண்பேன் வரம்பிலாத் தலைவனே
உனது உருவின் முதலும் நடுவும்
இறுதியும் மூலமும் கண்டிலேன் நானே.

11-17 வானம் தனிலே எங்கும் இருந்தும்
431 தீயழல் போன்று ஒளிப்பிழம் பாகியே
பார்வை மங்கிடச் செய்திடும் பரிதியாய்
ஒளியும் வீசியே அளவிடற் கரிதாய்
எங்கும் ஒளிக்கற் றையாய் மிளிர்ந்தே
சக்கரம் கதையும் மகுடமும் காண்பனே.

11-18 எண்ணம் எல்லாம் கடந்தே உயர்ந்து
432 அழிவிலா எல்லாம் நிறைகரு வூலம்
எனவும், அழிவிலா நித்திய தருமமும்
காப்பவன் என்றும், உனையே, என்றும்
சனாதனப் புருடனாய் எண்ணுகின் றேனே.

11-19 ஆதியும் நடுவும் அந்தமும் இல்லா
433 வரம்பிலா வலுவும் கணக்கிலாக் கரங்களும்
சூரியன் சந்திரன் என்பவை கண்களாய்
ஒளிப்பிழம் பாயுல கெரித்தல் போன்றே
கொழுந்துவிட் டெரியும் வேள்வித் தீபோல்
உன்முகப் பொலிவைக் காண்பேன் நானுமே.

11-20 விண்ணும் மண்ணும் உன்னால் நிறைந்தன
434 எங்கும் விரிந்துள இடைவெளி இத்தகை
வலிமிகுந் தோயே அச்சம் தந்திடும்
மூன்று உலகும் உன்னுள் அடங்குமே.

11-21 வானவர் கூட்டம் உன்னுளே புகுந்திடும்
435 அஞ்சியே சிலரும் கைகுவித் தொழுவரே
சித்தரும் முனிவரும் உன்புகழ் வாழ்கெனப்
போற்றிடும் ஒலியும் எதிரொலித் திடுமே.

11-22 உருத்திரர் வசுக்கள் சாத்யர் ஆதித்யர்
436 விசுவ தேவர் அசுவனி மருதர்
ஊஷ்மபர் விஞ்சயர் யட்சர் சித்தர்
அசுரர் வியப்பாய் நோக்கும் உனையே.

11-23 அநேக வாய்களும் கண்களும் கொண்டவுன்
437 வலிய வடிவும் நீண்ட கைகளும்
எண்ணில் அடங்காப் பாதமும் தொடையும்
பரந்த மார்பும் பயங்கரப் பற்களும்
கண்டே என்னோடு உலகும் நடுங்குமே.

11-24 வானைத் தொடும் நீ ஒளியாய் வானவில்
438 வண்ணம் கொண்டே திறந்த வாயுமாய்
விரிந்த தீயுமிழ் விழிகள் பார்த்தென்
ஆழ்ந்த நெஞ்சும் அஞ்சியே நடுங்கும்
வலியும் குன்றும் அமைதியும் குறையுமே.

11-25 விரிந்த பரந்த நிமிர்ந்தவுன் வாயினுள்
439 ஊழித் தீப்போல் பற்களைக் காண்பேன்
வேறிடம் அறியேன் புகலிடம் காணேன்
உலகின் தஞ்சமே அருள்புரி கடவுளே.

11-26 திருத ராஷ்டிரர் மக்களும் அவரொடு
440 உலகில் இங்குள மன்னர் தொகுதியும்
வீடுமர் துரோணர் சூதனின் மகனும்
நமது படையின் வீரரும் திரண்டே.

11-27 விரிந்தவுன் வாயினுள் விரைந்தே வீழ்வர்
441 பார்த்திடப் பயங்கர அகோரப் பற்கள்
பற்களின் இடையில் பலரும் சிக்கியே
தலைகள் பொடிந்து அரைந்திடக் காணுமே.

11-28 கடல்மடி மீதிலே வேக மாகவே
442 நீரினைக் கொட்டும் ஆற்றுப் பெருக்காய்
வலியுடை யோர்களும் இத்தரை மன்னரும்
எரியுமுன் வாயில் விரைந்து வீழ்வரே.

11-29 எரியும் விளக்கில் விரைந்தே விட்டில்
443 உயிர்விட வீழ்வது போன்றே இவரும்
விரைந்துன் வாயில் நுழையுமே அழியவே.

11-30 எங்கும் எல்லாம் விழுங்கும் தீப்போல்
444 மனித இனத்தை நக்கிநீ விழுங்குவாய்
பரந்த வெளியை உன்புகழ் நிறைக்கும்
உன்கடும் சுடரில் எரியும் உலகே.

11-31 உன்னைத் தெளிவாய்க் காட்டுக உனது
445 உருவமோ எத்தனை பயங்கரம் உனைநான்
தொழுவேன் கருணை காட்டுப் பரனே
உள்ள வாறுனை அறிந்திட ஆசை
உன்வினை யாடல் எனைத்திகைப் புறுத்துமே.

பகவான் கூறுவான்

11-32 உலகை அழிக்கும் காலமும் நானே
446 உலகில் மனித இனத்தை மாய்க்க
உருவும் எடுத்தேன் போரிடக் குழுமிய
வீரர் எவரும் மரணம் தப்பார்
உயிருடன் வாழும் ஒருவன் நீயே.

11-33 எனவே எழுக உன்புகழ் வெல்க
447 எதிரியை வென்றிடு, செல்வ வாழ்வை
அனுபவி நீயுமே, இவரெலாம் என்னால்
முன்னமே வெல்லப் பட்டுளார் தாமே
நீபுறக் கருவியே இடக்கை வீரனே.

11-34 துரோணர் வீடுமர் மற்றும் ஜெயத்ரதன்
448 கர்ணன் இங்குள இதர வீரரும்
என்னால் கொல்லப் பட்டுளார் அவர்களை
அஞ்சா தழித்திடு போரிடு உனது
பகையைக் களத்தில் பொடியாய்த் தகர்க்கவே.

சஞ்சயன் கூறுவான்

11-35 கேசவன் வாசகம் கேட்டதும், மகுடம்
449 அணிந்தான் கரங்களைக் கூப்பி நடுங்கியே
விழுந்தும் தொழுதும். பயத்தில் நாவும்
குழறித் தலையைத் தாழ்த்தி மீண்டும்
பார்த்தன் உரைப்பான் கிருஷ்ணன் இடத்தே.

அருச்சுனன் கூறுவான்

11-36 கிருஷ்ணா, உலகம் உன்புகழ் போற்றி
450 உன்னரு ளாலே இன்புறல் உண்மை
அசுரர் அஞ்சியே ஓடுவர் திசையெல்லாம்
சித்தர் குழாமும் வீழ்ந்து தொழுமே.

11-37 உயர்ந்தாய், வேறெது செய்வர் அவர்தாம்
451 முதல்வா, பிரம்மன் உன்னிலும் தாழ்வான்
எல்லை இலானே, தேவ தேவனே
அனைத்து உலகின் உறைவிடம் நீயே
அழிவிலா உருவமும் அருபமும் நீயே
அப்பால் உளவுயர் பிரம்மமும் நீயே.

11-38 முழுமுதற் கடவுளே, ஆதி மனிதன்
452 அனைத்து உயிரின் அடைக்கலம் நீயே
அறிவோன், அறியப் படுவோன் நீயே
உயர்ந்து விளங்கும் உறைவிடம் நீயே
பரந்தவுன் வடிவிலே விரியுமிவ் வுலகே.

11-39 வாயுவும் நீயே வருணனும் நீயே
453 அந்தகன் அக்கினி சந்திரன் நீயே
வணக்கம் உனக்கே ஆயிரம் வணக்கம்
மீண்டும் வணக்கம் வணக்கமும் உனக்கே.

11-40
454

உன்முன் தொழுவேன் உன்பின் தொழுவேன்
யாதுமாய் நின்றாய்த் திசையெலாம் தொழுவேன்
வரம்பில் சக்தியில் அளவிலாப் பலத்தில்
எதையும் தாங்குநீ எல்லாம் நீயே.

11-41
455

அதிக அன்பால் அறிவின் குறைவால்
உன்புகழ் அறியா நண்பனாய்க் கருதியே
கிருஷ்ணா என்றும் யாதவா என்றும்
நண்பா என்றும் துடுக்காய் அழைத்தனே.

11-42
456

களித்திடும் காலமும் இளைப்புறும் போதும்
தனித்து இருப்பினும் தோழர் குழுவிலும்
உண்ணும் பொழுதும் வேடிக் கையெனச்
செய்துள ஏளனம் அவமதிப் பெல்லாம்
குற்றம் இலானே வரம்பு இலானே
எனது பிழையை மன்னித் தருள்கவே.

11-43
457

அனைத்துச் சராசர உலகின் தந்தை
குருவிலும் பெரிய மதிப்புநீ உடையாய்
உனக்கு இணையாய் ஒருவரும் இலையே
உலகெலாம் உனது ஆட்சி உயர்ந்ததே.

11-44
458

எனவே உன்முன் வீழ்ந்து தொழுவேன்
உகந்த முறையில் உடலால் தொழுவேன்
தனயன் இடத்துத் தந்தை போன்றும்
நண்பன் இடத்து நண்பன் போன்றும்
அன்பன் இடத்து அன்பன் போன்றும்
என்பிழை பொறுத்து எனக்கருள் புரிகவே.

11-45
459

இதுவரை எவரும் பார்த்திரா தனையுமே
கண்டேன் நானே கொண்டேன் இன்பமே
எனினும் என்னைப் பயமும் வருத்தும்
தேவா திதேவா உலகின் உறைவே
பழையவுன் உருவைக் காட்டி யருள்கவே.

11-46
460

தலையில் மகுடம் கையில் கதையுடன்
சக்கரத் தோடும் பழைய வடிவை
மீண்டும் கண்டிட விழைந்திடும் நானே
ஐயனே ஆயிரம் கையனே எண்ணிலா
வடிவாய் நான்கு கையுடன் மீண்டும்
உனதுமுன் வடிவை எடுத்து அருள்கவே.

பகவான் கூறுவான்

11-47
461

அருச்சுனா, எனது அருளால் நீயுமே
ஆத்ம யோகம் காட்டும் வடிவைக்
கண்டனை ஊடுரு வியொளிரும் உருவை
உன்னை ஒழியமுன் கண்டிலர் எவருமே.

11-48
462

தியாகம் வேதம் தருமம் கருமம்
கடினத் தவமும் ஆழ்ந்த கல்வியும்
துணையில் மாந்தர் இந்த வடிவின்
காட்சிக் குருகுலக் கொழுந்தே காணார்
நீதான் ஒருவன் பார்த்த துண்டே.

11-49
463

பயங்கர உருவைப் பார்த்த நீயும்
பயந்திட வேண்டாம் மயங்கிட வேண்டாம்
பயத்தை விட்டொழி இதயத் தின்புறு
பார்நீ மீண்டும் பழைய உருவே.

சஞ்சயன் கூறுவான்

*11-50* வசுதேவ் இவ்விதம் அருச்சுனன் இடத்து
*464* உரைத்தே தனது இயற்கை வடிவை
எடுத்தே அருச்சுனன் அச்சம் அகற்றி
அமைதி அளித்தே மகானும் மீண்டும்
கொண்டான் தனது சாந்தவு ருவையே.

அருச்சுனன் கூறுவான்

*11-51* சனார்த்தனா, சாந்த மனித வடிவை
*465* மீண்டும் கண்டே அமைதி அடைந்து
இயல்பு நிலையை எய்திட லானே.

பகவான் கூறுவான்

*11-52* எனதுநீ கண்ட இந்த உருவும்
*466* காண்பதற் கரிதே தேவர் தாமும்
இந்த உருவைக் காணவே மெய்யாய்
என்றும் விரும்பி இருப்பதும் உளரே.

*11-53* எனைநீ கண்டது போன்று வேதமும்
*467* கண்டிட முடியா, தவத்தால் முடியா
தானம் வேள்வி யால்முடி யாததே.

*11-54* அருச்சுனா, என்பால் கொண்டுள பக்தி
*468* வழியாய் மெய்யாய் இதுபோல் உணர்ந்தும்
பார்த்தும் அறிந்தும் அடையலாம் எனையே.

*11-55* என்னை உயர்வாய் எண்ணியே எனக்காய்க்
*469* கருமம் புரிவோன் எனது பக்தனாய்ப்
பற்றெனும் தளையில் விடுதலை பெற்றும்
எவ்வகை உயிரினும் வெறுப்பும் இன்றியே
என்னை அடையுமே பாண்டு குலத்தனே.

# அத்தியாயம் - 12

## பக்தி யோகம்

அருச்சுனன் வினவினான்

*12-01* *யோகச் சமநிலை எய்தி உன்னைத்*
*470* *தொழுவார் மற்றும் அழிவிலா அருபம்*
*தொழுவார் என்றிரு பக்தர் தம்மில்*
*யோகம் அதிகம் அறிவார் யாரே.*

பகவான் கூறுவான்

*12-02* *மனத்தை என்னிலே வைத்துச் சமநிலை*
*471* *எய்தி முழுதும் நம்பித் தொழுவார்*
*யோகம் சிறந்தார் என்றெண் ணுவனே.*

*12-03* *அழிவிலா விளக்கிட முடியா உருவிலா*
*472* *எங்கும் இயங்கும் சிந்தனைக் கெட்டா*
*மாற்றம் இல்லா அசைவிலா என்றும்*
*நிலைத்த பொருளைத் தொழுவர் தாமே.*

*12-04* *ஐம்புலன் தடுத்து அடக்கி ஆள்வார்*
*473* *எல்லாம் சமமே என்று எண்ணுவார்*
*எல்லார் நலனிலும் இன்பம் எய்துவார்*
*அனைவரும் என்னை வந்து அடைவரே.*

*12-05* *அருபம் தனிலே மனத்தைச் செலுத்துவார்*
*474* *அல்லலே அதிகமாம், ஏனெனில் உடலுளார்*
*அருபப் பாதை அடைதலும் கடிதே.*

12-06 என்னிலே மெய்யாய்க் கருமம் எல்லாம்
475 துறந்து என்னை என்றும் நினைந்து
எனையே முழுமனத் தோடு யோகம்
தனிலே தியானமாய்த் தொழுவார் தாமே.

12-07 இவர்தம் சிந்தனை என்னிலே நிலைத்தலில்
476 பிறப்பு இறப்பு என்னும் கடலில்
இருந்தே விடுதலை அளிப்பேன் விரைந்தே.

12-08 உனது மனத்தை என்னிலே வைத்திடு
477 உனது அறிவை என்னிடம் செலுத்துநீ
என்னில் உறைவாய் ஐயமும் இலையே.

12-09 உறுதியாய் உனது மனத்தை என்னிலே
478 நிலைத்திட முடியா நிலையிலும், தனஞ்சய,
யோகப் பயிற்சியால் அடைந்திட முயல்கவே.

12-10 நிலைத்த பயிற்சி இயலா தெனினும்
479 என்பணி செய்வதில் ஈடு படுகவே.
எனது நிமித்தம் கருமம் புரிந்தே
பூரண நிலையை எய்தலாம் நீயுமே.

12-11 இதையும் இயற்றப் பலமிலை என்னில்
480 தன்னை அடக்கி என்னில் இணைந்து
தஞ்சம் புகுந்து செய்பலன் துறக்கவே.

12-12 நிலைத்த பயிற்சியில் ஞானம் சிறந்தது
481 அதனினும் சிறந்தது தியானம் அதனினும்
கருமப் பலனைத் துறத்தல் சிறந்தது.
பலனைத் துறக்கில் அமைதி தொடருமே.

12-13 எவ்வகை உயிர்க்கும் கெடுதல் நினையா
482 இரக்கமும் அன்பும் உடைத்தாய்ப் பற்றொடு
அகந்தை அகன்று இன்பம் துன்பம்
இரண்டிலும் சமநிலை பொறையும் உடையரே.

12-14 என்றுமே திருப்தி சமநிலை எய்திடும்
483 தன்னை அடக்கி மனத்தில் உறுதியும்
புத்தியும் எனக்கு அளிப்பின் எனது
பக்தனே எனக்கு அவனும் அன்பனே.

12-15 எவரிடம் இருந்து உலகுவி லகாதோ
484 எவர்தாம் உலகில் இருந்துவி லகாரோ
இன்பம் துன்பம் அச்சம் என்னும்
உளைச்சலில் உழலார் எனக்கும் இனியரே.

12-16 எதையும் விரும்பான் தூயோன் திறத்தான்
485 வெறியிலான் கலங்கான் ஈடுபா டெதிலும்
துறக்குமென் பக்தன் எனக்கும் இனியனே.

12-17 விருப்பும் இல்லான் வெறுப்பும் இல்லான்
486 வருந்துவ தில்லான் ஆசை இல்லான்
நல்லன தீயன எல்லாம் துறந்தான்
நிறைந்த பக்திமான் எனக்கும் இனியனே.

12-18 நண்பர் பகைவர் புகழ்ச்சி இகழ்ச்சி
487 வெப்பம் தட்பம் இன்பம் துன்பம்
என்றெதிர் நிலைகளில் ஒன்றாய் நிற்பார்
பற்றில் பற்றும் இல்லா திருப்பரே.

12-19 புகழுரை இடித்துரை ஒன்றாய் நினைப்பார்
488 அமைதியும் அடைந்ததில் திருப்தியும் உள்ளார்
குறியிலார் மனத்தில் உறுதியும் நிறைந்த
பக்தியும் உடையார் எனக்கு இனியரே.

12-20 என்னை இலக்காய் முழுதும் நம்பியே
489 இங்குநான் உரைத்த உயிர்தரும் அறிவுரை
வழியில் நிற்பார் எனது பக்தரே
எல்லாம் கடந்த இனியராம் எனக்கே.

# அத்தியாயம் - 13

## வீடும் வீட்டுக்குரியோனுமான ஆன்ம தத்துவம்

அருச்சுனன் வினவினான்

*13-01* *இயற்கை ஆன்மா களமும் களத்தை*
*490* *அறிவோன் ஞானம் அறிய வேண்டிய*
*அனைத்தும் கேசவா அறியநான் விரும்புமே*

பகவான் கூறுவான்

*13-02* *குந்தி மகனே இவ்வுடல் களமாம்*
*491* *இதனை அறிவான் களமறி வானாம்*
*ஞானியர் இவ்வா றழைத்தல் உளதே.*

*13-03* *பார்த்தா, களங்களில் களத்தை அறிவான்*
*492* *நானென அறிநீ களமும் களமறி*
*வானை அறியும் அறிவே மெய்யாய்*
*ஞானம் என்று கருதுவேன் நானே.*

*13-04* *களமெனில் என்ன? அதனியல் பென்ன?*
*493* *எவ்விதம் மாறும்? எதனில் வந்தது?*
*யார்களம் அறிவார்? அவர்தம் சக்தியும்*
*எவையென என்னிடம் கூறுக சுருக்கியே.*

*13-05* *பொருளும் பொதிந்த முடிவாம் பிரம்ம*
*494* *சூத்திரம், பாக்களில் பற்பல வகையில்*
*சந்தமாய் முனிவர் பரவினர் பாடியே.*

*13-06* *ஐம்பெரும் பூதமும், அகந்தை, புத்தியும்*
*495* *அருபமம் அதனும் பத்தொடு ஒன்றுசேர்*
*அறிவும் ஐந்து புலனறி வுடனே.*

13-07 வேட்கை வெறுப்பு இன்பம் துன்பம்
496 கூடிய உடலும் அறிவும் உறுதியும்
களமும் களத்தின் திரிபும் ஆகுமே.

13-08 பணிவு பாவனை யிலாமை தொல்லை
497 இலாமை பொறையும் குருபணி நேர்மை
தூய்மை உறுதிதன் அடக்கமும் சேர்ந்தே.

13-09 புலனறி பொருளில் விருப்ப மின்மை
498 அகந்தை யிலாமை பிறப்பு இறப்பு
பிணிகள் மூப்பின் தொல்லை உணர்தலே.

13-10 பற்று மிலாமை தனயன் தாரம்
499 வீட்டில் ஈடுபா டிலாமை, வேண்டும்
வேண்டா நிகழ்ச்சி யிடைநடு நிலையே.

13-11 வேறெதும் இன்றியே யோக மூலமாய்
500 என்னில் தளர்விலாப் பக்தியைத் தனித்தே
மக்கள் கும்பலில் மகிழ்ச்சி இலாதே.

13-12 ஆத்ம ஞானம் நிலையாய் நிற்றலும்
501 உண்மை அறிவின் உட்பொருள் அறிதலே
ஞானமாம் இதனெதி ரெலாமஞ் ஞானமே.

13-13 அறிய வேண்டிய தனையும், எதனை
502 அறியில் பிறப்பு இலாநிலை எய்துமோ
உளதுமில் இலதுமில் என்றும் ஆதியே
இல்லாப் பரத்தை உனக்கு உரைப்பனே.

13-14 கைகளும் கால்களும் எங்கும் உடைத்தாய்க்
503 கண்களும் தலைகளும் எங்கும் உடைத்தாய்க்
காதும் வாய்களும் எங்கும் உடைத்தாய்
அனைத்தும் சூழ்ந்தே அவனுல குறையுமே.

13-15 புலனுணர் வின்றியே புலன்களில் ஒளிர்ந்தும்
504 பற்றும் இலாதே எல்லாம் தாங்கியும்
குணம்தனைச் சாராக் குணந்தனைத் துய்த்தே.

13-16 அனைத்து உயிர்களின் உள்ளும் புறமும்
505 அசையும் அசையாப் பொருட்களில் உறைந்தும்
கண்ணில் தெரியா நுண்ணிய தாகியும்
அண்மை யிலுமாய்த் தொலைவிலும் இருக்குமே.

13-17 உயிர்கள் தம்மில் பங்கிடப் பெறாதும்
506 அனைத்து உயிரிலும் பிரிந்து இருந்தும்
அனைத்து உயிர்களைத் தாங்குவான் என்றும்
அழிப்பதும் அவனே ஆக்கலும் அவனே.

13-18 ஒளிகளுக் கெல்லாம் பேரொளி எனவும்
507 இருளின் அப்பால் உளதாம் என்றும்
அறிவும் அறியப் படுபொருள், அறிவால்
அடைவன எல்லாம் இதயத் திருக்குமே.

13-19 களமும் ஞானமும் ஞானத் திலறியும்
508 பொருளெலாம் சுருக்கிச் சொல்லப் பட்டன
இதையறி பக்தன் என்னில் இணையுமே.

13-20 களமும் புருடனும் முதலிலி என்றறி
509 அனைத்து மாற்றமும் குணமும் களத்தில்
பிறந்தன என்பதை அறிந்திடு நீயுமே.

13-21 காரண காரிய காரணம் பிரக்ருதி
510 இன்ப துன்ப அனுபவக் காரணம்
புருடன் என்றும் அழைக்கப் படுமே.

13-22 பிரகிரு தியுறை புருடன் அதனில்
511 பிறக்கும் குணம்தனைத் துய்த்தல் உண்டு
குணங்கள் மீதுள பற்றே அவனது
நல்ல தீய பிறப்பின் ஏதுவே.

13-23 உடலில் உறையும் பரம புருடனை
512 மேற்பார் வையாள் அனுமதி அளிப்பான்
ஆதர வாளன் அனுபவிப் பாளன்
தலைவர் ஈசர் என்றும் அழைப்பரே.

13-24 பிரக்ருதி புருடன் மற்றும் அவைதம்
513 குணங்கள் அறிந்தார் எவ்வித நிலையில்
இருப்பினும் மீண்டவர் பிறந்தி டாரே.

13-25 சிலரோ தியானம் புரிதல் மூலமும்
514 சிலரோ ஞான யோக மூலமும்
சிலரோ கரும யோக மூலமும்
தன்னில் ஆத்மா தானே காண்பரே.

13-26 இதனை அறியாச் சிலரோ பிறரிடம்
515 கேட்டே தொழுவர் கேட்டதற் கிணங்க
நடந்தே மரணம் கடத்தலும் உண்டே.

13-27 பாரதக் குரிசே, அசையும் அசையா
516 என்ற எவ்வகை உயிர்கள் பிறப்பது
களமும் களவறி வோன்தம் இருவரின்
இணைப்பில் இருந்தே என்றுநீ அறியவே.

13-28 எல்லா உயிரிலும் சமமாய் இருக்கும்
517 பரம பிதாவை அழியும் பொருளில்
அழியா திருப்பான் என்றே காண்பார்
உண்மைப் பார்வை உடையார் ஆவரே.

13-29 எங்கும் அவரே சமமாய் இருப்பதை
518 மெய்யாய்க் கண்டே தமது ஆத்மா
தாமே அழிக்கார் உயர்வழி செல்வரே.

13-30 எல்லாச் செயல்களும் மெய்யாய் இயற்கை
519 செய்வதும் ஆத்மா செயலிலா திருப்பதும்
பார்ப்பார் மெய்யாய் பார்வை உடையரே.

13-31 பலவகை உயிரினம் ஒரேஒரு வேரிலே
520 முளைத்து அதனிலே பிரிந்து பரவுதல்
காண்பார் பரம பதத்தை அடையுமே.

13-32 முதலும் குணமும் இல்லா அழிவிலா
521 பரம்பொருள் உடலில் இருப்பினும் செயலும்
இலையே. செயலின் பாதிப்பு மிலேயே.

13-33 எங்கும் நிறைஆ காயம் நுண்ணிதே
522 எனினும் பாதிப் பிலாதது போன்று
உடலுறை ஆத்மா பாதிப் பிலையே

13-34 ஒரேஒரு சூரியன் எல்லா உலகமும்
523 ஒளிரச் செய்தல் போன்றே இயற்கைத்
தலைவன் இயற்கை முழுதும் ஒளிருமே.

13-35 களத்திலும் களத்தை அறிவார் இடையிலும்
524 ஞானக் கண்வழி வேற்றுமை காண்பார்
உடலில் இருந்து உயிரின் விடுதலை
காண்பர் தாமுமே பரமம் அடையுமே.

# அத்தியாயம் - 14

## முக்குண இயல்பு

பகவான் கூறுவான்

14-01 ஞானத் திலெலாம் உயர்ந்த பரம
525 ஞானம் உனக்கு உரைப்பேன் மீண்டும்
இதையறி முனிவர் எய்தினார் பரமமே.

14-02 இந்த ஞானம் புகலிடம் புகுந்தோர்
526 எனது இயல்பில் இரண்டறக் கலந்து
உலகம் தோன்றும் போது மீண்டும்
பிறவார் அழிவுறும் காலம ழியாரே.

14-03 பார்த்தா, பிரம்மமே எனது கருப்பை
527 நானதில் என்கரு வைத்து ளேனே
பின்னர் உயிர்கள் பிறப்பது இதிலே.

14-04 எவ்வகைக் கருக்குழி இறப்பன பிறப்பினும்
528 பிரம்மமே அனைத்தின் கருப்பை, நானே
உற்பத்தி கருத்தா குந்தி மகனே.

14-05 சத்துவம் இராசசம் மந்தம் என்பவை
529 பிரகிரு திதனிலே பிறந்த குணங்கள்
வல்லவ, உடலில் வாழும் அழியாப்
புருடனை உடலொடு இவைதாம் கட்டுமே.

14-06 குற்றம் இலானே சத்துவம் மலமிலா
530 ஒளியொடு நலமுடன் இன்பப் பற்றுடன்
ஞானத் தோடும் பிணிப்பும் உடைத்தே.

14-07 இராசசம் உணர்ச்சி மயமாய்ப் பற்றின்
531 மூலமும் உயிர்மேல் பாசமும் உடையதே
உடலில் உறையும் ஆத்மா தனையே
கருமப் பயனுடன் கட்டிப் பிணிக்கும்
என்றுநீ அறிகவே குந்தி மைந்தனே.

14-08 மந்தம் அஞ்ஞா னமதிலே தோன்றும்
532 உடலுறை ஆத்மா மயக்கிக் கவன
ஈனம் தூக்கம் சோம்பலில் கட்டுமே.

14-09 சத்துவம் இன்பமொ டிணைந்து இராசசம்
533 செயலுடன் பிணைந்தும் மந்தமோ உண்மை
அறிவை மறைத்தும் கவனக் குறைவுடன்
மாறாய்ப் பார்த்தா, கட்டிப் பிணிக்குமே.

14-10 சத்துவம் உணர்ச்சி மந்தக் குணங்களைத்
534 தாண்டியும் மேலாய் உயர்தலும் உண்டே
உணர்ச்சி சத்துவ மந்தக் குணங்களைக்
கடத்தலும் மந்தமும் சத்துவ உணர்ச்சிக்
குணங்களைக் கடப்பதும், பார்த்தா, உளதே.

14-11 உடலின் அனைத்து வாய்வழி அறிவொளி
535 வெளிவரின், சத்துவம் உயர்வதாய் அறிகவே.

14-12 உணர்ச்சிக் குணம்தான் உயரும் காலைப்
536 பேரவா, முயற்சி செயல்வெளிப் பாடு
ஆசை அமைதி யின்மை எழுமே.

14-13 மந்தக் குணமோ உயர்ந்திடு வேளை
537 இருளொடு தேக்கம் மயக்கம் கவனக்
குறையும் உதித்தலும் உளதரு குலத்தனே.

14-14 உடலில் உறைவோன் அழிவுறும் காலைச்
538 சத்துவக் குணமே ஓங்கும் என்னில்
முனிவரின் கறையிலா உலகை எய்துமே.

14-15 உணர்ச்சிக் குணம்ஓங் கும்கால் அழிவுறில்
539 கருமப் பற்றை உடையார் இடையிலும்
மந்தக் குணம்ஓங் கும்கால் அழிவுறில்
அறிவிலி கருவில் மீண்டும் தோன்றுமே.

14-16 நல்வினைப் பயனோ இன்பம் தூய்மை
540 உணர்ச்சிப் பயனோ துன்பமாம், மந்தப்
பயனோ அறிவீ னமென்றே அறையுமே.

14-17 அறிவு பிறக்கும் சத்துவக் குணத்திலே
541 ஆசை பிறப்பதோ உணர்ச்சி தனிலே
மந்தக் குணத்தில் மடமை மயக்கம்
கவனக் குறையும் பிறத்தலும் உளவே.

14-18 சத்துவக் குணத்தார் உயர்ந்தே எழுவர்
542 உணர்ச்சி வயத்தார் நடுவிலே நிற்பர்
மந்த இயல்பினர் தீய குணங்களால்
சூழ்ந்தே தாழ்ந்தே கீழே விழ்வரே.

14-19 குணங்களைத் தவிர்த்து வேறு கருத்தா
543 காணார், குணங்களின் உயர்பொருள் அறிவார்
என்னுடை இயல்பில் இணைபவர் ஆவரே.

14-20 உடலில் உறைபவன் உடல்உரு வாகக்
544 காரண மாம்முக் குணங்களைக் கடந்து
பிறப்பு இறப்பு துயரம் மூப்பிலும்
விடுதலை அடைந்து அமிர்தம் அருந்துமே.

அருச்சுனன் கூறுவான்

14-21 இந்தமுக் குணங்கள் கடந்தவர் அறிகுறி
545 எவையே அவர்தம் செயல்திறம் எவ்வகை
குணங்கள் தமையே எவ்விதம் கடப்பரே.

பகவான் கூறுவான்

14-22 ஒளியும் மயக்கமும் முயற்சியும் வெளிப்படும்
546 காலை வெறுப்பு இன்றியும், இலையெனில்
விரும்பி எண்ணி ஏங்குதல் இலரே.

14-23 குணங்களில் சலனம் இன்றியே சுழலும்
547 குணங்கள் என்று கூறியே, அசையா(து)
அகன்றே நடுநிலை நிற்பார் தாமே.

14-24 இன்பம் துன்பம் இரண்டிலும் சமமாய்த்
548 தன்னடக் கமொடும் மண்ணின் குவியலும்
பொன்னும், கல்லும், ஒன்றெனக் கருதியே
வேண்டுவார் வேண்டார் வேறுபா டிலாதும்
போற்றலும் தூற்றலும் ஒன்றாய்க் கருதியே.

14-25 புகழ்ச்சி இகழ்ச்சி சமமாய் எண்ணியே
549 நண்பர் பகைவர் ஒன்றென எண்ணியே
அனைத்து முனைப்பும் அறவே துறந்தார்
தமையே, குணங்கள் கடந்தார் என்பரே.

14-26 பக்தி யோகம் மூலமே என்னைப்
550 பணிவார் மூன்று குணங்கள் கடந்தார்
பிரம்மம் என்றிடத் தகுதியும் உடையரே.

14-27 ஏனெனில் பிரம்ம உறைவிடம் நானே
551 மரணம் ஒழிக்கும் அழிவிலா அமிர்தமும்
காலா காலத் தருமமும் நானே
அந்த மிலாநான் ஆனந் தமாமே.

# அத்தியாயம் - 15

## உயர் நலம் உடையவர்

### பகவான் கூறுவான்

*15-01* *வேர்கள் மேலுமாய்க் கிளைகள் கீழுமாய்*
*552* *அச்வதம் போல்அர சமரம் அழிவிலை*
*என்பர் மரத்தின் இலைகளே வேதமாம்*
*இதனை அறிவார் வேதம றிவாரே.*

*15-02* *கீழும் மேலும் கிளைகள் பரந்து*
*553* *குணங்கள் ஊட்டம் பெற்றுமே வளரும்*
*புலனறி பொருட்கள் அரும்புகள் ஆகும்*
*வேர்கள் கீழாய் வளர்ந்து செல்லும்*
*மனித உலகில் கருமத் தனையே.*

*15-03* *ஈங்கதன் உருவை அறிந்திட முடியா,*
*554* *மூலமும் முடிவும் வேர்விடு இடமும்*
*தெரிந்திட முடியா, இத்தகை வலிதாம்*
*வேர்விடு அரச மரத்தைப் பலமுள*
*பற்றின் மையெனும் கருவியால் வீழ்த்தியே.*

*15-04* *அப்பால் உள்ள அந்த வழியைத்*
*555* *தேடியே அதன்வழி நடக்கில் மீள்தல்*
*இலையோ எந்தப் புருடனி லிருந்து*
*ஆதி சக்தி உதிக்குமோ மெய்யாய்*
*அவனை அடையவே நானும் செல்வனே.*

15-05 செருக்கும் மயக்கமும் இன்றிப் பற்றெனும்
556 தீயதை வென்றும் ஆத்மா நிலையாய்
உறைந்தும் ஆசை அடங்கி இன்ப
துன்ப எதிராய்க் குணங்களில் நீங்கி
அழிவிலா அந்த வழியில் மயக்கம்
இன்றி நடந்து செல்வர் தாமே.

15-06 ஆங்கே சூரியன் ஒளியும் வீசிடான்
557 சந்திரன் அக்கினி ஒளியைத் தந்திடான்
ஆங்கே சென்றவர் மீள்வதும் இலையே
அதுவே எனது பரம பதமே.

15-07 எனது ஒருசிறு கூறுதான் உயிர்வாழ்
558 உலகில் அழிவில் புருடன் ஆனதே
பிரகிரு தியில்மறை ஐம்புலன் களோடு
ஆறா வதாக மனத்தை ஈர்த்தே
இதனைச் சுற்றியே வருதலும் உண்டே.

15-08 ஈசன் உடலை எடுக்கும் போதும்
559 விடுக்கும் போதும் காற்று மணத்தைக்
கவர்ந்து செலல்போல் புலனொடு மனத்தைச்
சேர்த்துப் பற்றிச் சென்றிடு வானே.

15-09 மெய்யிலும் வாயிலும் கண்ணிலும் கருத்திலும்
560 மனத்திலும் மூக்கிலும் இருந்து கொண்டே
புலன்களின் பொருட்களை அனுபவித் திடுமே.

15-10 எப்பொழு தவன்செலும், உறையும் இன்புறும்
561 குணங்களில் இருந்தே மயங்கினர் அறியார்
எனினும் ஞானக் கண்ணுளார் அறிவரே.

15-11 யோகிகள் முயன்றே அவன் உள் இருப்பதை
562 அறிவரே, ஆத்ம பயிற்சி இல்லா
அறிவிலி முயன்றும் அறிகி லாரே.

15-12 உலகை ஒளிபெறச் செய்யும் சூரியன்
563 ஒளியும் மதியின் ஒளியும் தீயின்
ஒளியும் என்னிடத் தெனநீ அறிகவே.

15-13 மண்ணுளே நுழைந்து மற்றுமென் சக்தியால்
564 உயிர்களைத் தாங்குவேன் சுவையுள சோம
பானமாய்ச் செடிகொடி தமையுமூட் டுவனே.

15-14 உயிர்களின் எரிசக் தியாகியே உயிர்க்கும்
565 உடல்களைப் பற்றியே உயிரின் மூச்சுடன்
இணைந்து நால்வகை உணவைத் தகிப்பனே.

15-15 எல்லோர் இதயத் திருக்கும் நானே
566 என்னில் இருந்தே நினைவும் அறிவும்
மறதியும் உதிக்கும், வேதம் அனைத்திலும்
அறிந்திட வேண்டுவோன் நானே, வேதம்
அறிந்தவன் வேதாந் தாசான் நானே.

15-16 அழிவன அழியா தனயிரு சக்திகள்
567 உலகில் உளவே உயிரெலாம் அழிவன
மாறா தவையெலாம் அழிவிலா என்பரே.

15-17 இவரில் வேறாம் பரம ஆத்மா
568 அவனே உயர்ந்த உத்தம புருடன்
மூன்று உலகிலும் பரந்து தாங்கி
நிற்கும் அழிவிலாத் தலைவன் ஆகுமே.

15-18 அழிவன தம்மில் நானே உயர்ந்தவன்
569 அழிவிலா தவையிலும் நானே உயர்ந்தவன்
வேதமும் உலகும் மகானெனப் போற்றுமே.

15-19 மயக்கம் இல்லான் என்னைப் பெம்மான்
570 என்றே அறிவான் எல்லாம் அறிவனும்
என்னைத் தன்னால் முழுதும் தொழுமே.

15-20 குற்றம் இலானே இவ்வுயர் ரகசியம்
571 உனக்கு என்னால் உரைக்க உற்றது
இதனை அறிவோர், ஒளிதனை வீசியே
பார்த்தா, கருமம் முடித்தவர் ஆவரே.

# அத்தியாயம் - 16

## தெய்வீக நல்லியல்பும் அசுரத் தீயவியல்பும்

பகவான் கூறுவான்

16-01 அச்ச மின்மை, தூய வாழ்க்கை
572 ஞான யோக உறுதி தருமம்
அடக்கம் தியாகம் சாத்திரக் கல்வி
தவமொடு நேர்மை யுடைமை எலாமே.

16-02 சினமொடு வன்மை யிலாமை உண்மை
573 துறவு சாந்தம் கபட மின்மை
உயிர்மேல் கருணை பிறர்பொருள் நயவா
மென்மை பணிவு கோழை யிலாமலே.

16-03 வலிமை பொறையே தைரியம் தூய்மை
574 பொறாமை யின்மை பெருமை யின்மை
பார்த்தா, தெய்வப் பிறப்பினர் குணங்களே.

16-04 பகட்டு அகந்தை தந்திரம் கோபம்
575 கடுமை அறியா மையும் அசுரப்
பிறவி யாளரின் குணங்கள் தாமே.

16-05 தெய்வக் குணங்கள் விடுதலை பொருட்டே
576 அசுரக் குணங்கள் அடிமைத் தளைக்கே
பாண்டவர் ஏறே கவலை வேண்டாம்
உனது பிறப்போ தெய்வீ கமாமே.

16-06 உயிரினப் படைப்பு இருவகை உலகில்
577 தெய்வத் தன்மை, அசுரத் தன்மை
தெய்வத் தன்மை விளக்கப் பட்டது
அசுரப் படைப்பை அறிகவே நீயே.

16-07 அசுர மனிதர் நல்ல சக்தி
578 நல்ல துறவு தூய்மை பண்பு
என்பவை அறியார் உண்மை இலாரே.

16-08 இவர்தாம் உண்மை உலகுக் கில்லை
579 அடித்தள மிலாதே ஆண்டவன் இலாதே
ஆசை இணைப்பில் உருவாம் உலகம்
என்பதைத் தவிர வேறிலை என்பரே.

16-09 இந்தக் கருத்தும் உடையராய் அழியும்
580 அற்ப அறிவும் உடையராய் உலகை
அழிக்கும் இவர்தாம் கொடுஞ்செயல் பகையே.

16-10 அடங்கா ஆசை யினடிமை யாகியும்
581 பகட்டு அகந்தை போலிக் கருத்தொடு
மயக்க ஏதுவால் துன்மதி யோடும்
தீய செயல்கள் புரிந்திட முனைவரே.

16-11 அவாவைத் தணிப்பதே உயர்ந்தது என்றும்
582 இவைதாம் எல்லாம் என்று உறுதியாய்ச்
சாவை முடிவில் தந்திடும் அளவிலாச்
சிந்தனை முயன்றே நிற்ப ராகியே.

16-12 நூற்றுக் கணக்கில் எதிர்பார்ப் படிமை
583 காமம் கோபம் வயமாய்ப் புலன்களின்
போகம் துய்த்திட நேரிலா வழிகளில்
செல்வக் குவியலைச் சேர்த்திட முனைவரே.

16-13 இன்றிதை வென்றேன் எண்ணம் நிறைபெறும்
584 முன்பே இதுவென் சொத்தே, மேலும்
இனியும் இதுவும் எனதே என்றே.

16-14 இந்த எதிரியை நானே கொன்றேன்
585 இதரர் தமையும் கொல்வேன் நானே
நானே தலைவன் நான்அனு பவிப்பேன்
பூரணம் பலவான் நான் இன் புறுவனே.

16-15 செல்வனும் நல்குடிப் பிறந்தான் நானே
586 என்னைப் போல்வார் எவர்தாம் உளரோ
தியாகம் செய்வேன் தருமம் புரிவேன்
இன்புறும் நானெனும் மதியிலி மயங்கியே.

16-16 எண்ணிலாக் கருத்தில் கலக்கம் அடைந்தே
587 மயக்க வலையில் பிணிக்கப் பெற்றே
ஆசை தணிப்பதில் முயன்று நின்றே
பாழும் நரகில் வீழ்வர் தாமே.

16-17 தன்னைப் புகழ்தல் விடாப்பிடி தருக்குச்
588 செல்வச் செருக்கெனும் போதை யிலூறியே
சாத்திர விதிகளுக் கெதிராய்ப் பகட்டு
விரும்பி உதட்டால் தியாகம் புரிவரே.

16-18 அகந்தை பதவி மயக்கம் காமம்
589 கோபம் அடிமை யாய் அக் கொடியோர்
தம்முடல் பிறருடல் என்ற எல்லா
இடத்திலும் என்னை வெறுப்பார் தாமே.

16-19 உலக மனிதரில் இத்தகு கொடிய
590 இரக்கம் இல்லா வெறுக்கும் தீயரை
அசுரக் கருப்பை தனில்நான் தள்ளுமே.

16-20 அசுரக் கருப்பை தனிலே வீழ்ந்து
591 பிறவிகள் தோறும் மயங்கி என்னை
அடையா, அதல பாதா ளமாழ்வரே.

16-21 தன்னை அழிக்கும் நரக வாயில்
592 காமம் கோபம் ஆசை மூன்றாம்
எனவே மனிதன் இவைதமைத் துறக்கவே.

16-22 குந்தி மைந்த இந்த இருண்ட
593 வாயில் மூன்றும் தாண்டிய மனிதன்
நன்னலம் பெற்றுயர் இருக்கை எய்துமே.

16-23 சாத்திர விதிகளை மீறியும் ஆசை
594 தூண்டிய வழியில் செல்பவர் பூரணம்
பெறாது இன்பமும் இலக்குமெய் திடாரே.

16-24 செய்யத் தக்கன தகாதன எவையென
595 உறுதி செய்திட உதவும் சாத்திரம்
சாத்திரம் சொல்வன அறிந்த நீயும்
அதன்வழி உலகில் நடந்திட வேண்டுமே.

# அத்தியாயம் - 17

## மூவகை நம்பிக்கை

அருச்சுனன் வினவினான்

17-01 முழுதும் நம்பியே சாத்திர நெறிகளை
596 மீறியும் வேள்விகள் செய்வார் நிலையெது?
சத்வமா, உணர்ச்சியா, மந்தமா, கண்ணனே.

பகவான் கூறுவான்

17-02 சத்வம் உணர்ச்சி மந்தம் என்னும்
597 முன்றுநம் பிக்கை பிறப்பின் இயல்பிலே
அமைந்த இவைதமைக் கேள்நீ இங்கே.

17-03 ஒவ்வொரு வர்தம் நம்பிக் கையவர்
598 இயல்பைப் பொறுத்தே அமையும் பரதா
மனிதன் நம்பிக் கையின் உருவாம்
அவனே அவன்நம் பிக்கை தானே.

17-04 தூயோர் கடவுளைத் தொழுவர் உணர்ச்சி
599 வயத்தார் யக்ஷர் அசுரரைத் தொழுவரே
இருண்டார் பூதமும் பிறவும் தொழுவரே.

17-05 ஆசை காமம் தூண்ட அகந்தை
600 பகட்டும் சேர்ந்து வேத நெறியும்
பிறழ்ந்து கடிய தவம்செய் வோரே.

17-06 உடலின் பூதத் தொகுதி ஆங்குள
601 என்னையும் வருத்தும் அறிவிலார் முயற்சியில்
அசுரக் குணத்தார் என்றுநீ அறிகவே.

17-07 அவரவர் விரும்பும் உணவும் மூவகை
602 வேள்வியும் தவமும் தருமமும் அன்னதே
அவற்றின் தனிக்குணம் என்னிடம் கேட்கவே.

17-08 பலமும் சக்தியும் வேகமும் நலமும்
603 மகிழ்ச்சியும், இன்பமும் சுவையொடு விருப்பமும்
பெருக்கும் திரவஊண் தூயோர் உவக்குமே.

17-09 உணர்ச்சி வயத்தார் விரும்பும் உணவோ
604 கசப்புப் புளிப்பு உவர்ப்பு உறைப்பு
வெப்பு எரிப்பு எரிச்சல் உலர்ந்த
துன்பம் நோயும் வருத்தம் தருவவே.

17-10 மந்தர் உணவோ பழையன சுவையில
605 அழுகின கெட்டன எச்சிலும் அசுத்தமே.

17-11 வேள்வியைக் கடனாய் உறுதியாய் நம்பியே
606 சாத்திர முறையில் பலனில் பற்றறச்
செய்வோர் வேள்வியே தூயன என்னுமே.

17-12 பயனை வேண்டியும் பகட்டு விரும்பியும்
607 செய்யும் வேள்வியோ காமரின் வேள்வியே
என்றுநீ அறிந்திடு பாரதக் குரிசிலே.

17-13 சாத்திர விதிகளின் எதிராய் உணவும்
608 வழங்கார் மந்திரம் ஓதார் தானமிலார்
நம்பா துசெயும் வேள்வி மந்தமே.

17-14 தேவரை இருபிறப் பாளரைக் குருவை
609 அறிஞரைத் தொழுதல் தூய்மை நேர்மை
பிரம்மச் சரிய விரதம் கைக்கொளல்
உயிர்கொல் லாமை உடல்செய் தவமே.

17-15 எரிச்சலைத் தூண்டா உண்மை இனிமை
610 பயன்தரு பேச்சு சாத்திரக் கல்விப்
பயிற்சியும் பேச்சின் தவமெனப் பேசுமே.

17-16 மனத்து மகிழ்ச்சி சமநிலை மவுனம்
611 அடக்கம் பண்பு மனத்தின் தவமே.

17-17 உயர்வாய் நம்பியும் பயனில் பற்றும்
612 இலாதே சமநிலை எய்தியே செய்யும்
மூவகைத் தவமும் தூய தாமே.

17-18 பிறரின் மதிப்புப் பெருமை தொழுகை
613 விரும்பி வெளியில் பகட்டாய்ச் செய்தவம்
நிலையிலா வலுவிலா உணர்ச்சி வகைத்தே.

17-19 அறிவும் மயங்கி தன்னை வருத்திப்
614 பிறரை அழித்திடச் செய்தவம் இருண்டதே.

17-20 தருமம் தகுந்த இடத்தில் தக்க
615 தருணம் தக்கார் தமக்குச் செய்ய
வேண்டும் என்ற உணர்விற் பெற்றது
திருப்பித் தாரார் தமக்குச் செய்யும்
தருமமே தூய்மை யானதாய்க் கருதுமே.

17-21 கொடுப்பது திரும்பப் பெறவும் பயனைக்
616 கருதியும் மனத்தில் குறையுடன் செய்யும்
தருமம் உணர்ச்சி வயத்த தாகுமே.

17-22 தகுதி இலார்க்குத் தகுதியில் இடத்து
617 தகுதியில் போதில் மதிப்பிலா வெறுப்புடன்
செய்யும் தருமம் மந்த வகைத்தே.

17-23 ஓம்தத் சத்எனப் பிரம்மமூ நிலையே
618 இந்த விதிவழி வகுத்ததே பழைய
நியதியும் வேதமும் வேள்வியும் ஆகுமே.

17-24 பிரம்ம உண்மை அறிந்தார் தாமும்
619 வேத விதிவழி ஓம் என ஓதியே
வேள்வியும் தவமும் தானமும் தொடர்வரே.

17-25 விடுதலை விழைவார் பயனை எண்ணா
620 தத் எனக் கூறியே பல்வகை வேள்வியும்
தவமும் தானமும் தொடங்குவர் என்பரே.

17-26 சத் எனக் கூறுதல் உண்மை நன்மை
621 என்னும் பொருளிலே, இதுபோல் பார்த்தா
சத் எனல் நல்வினை தனையும் குறிக்குமே.

17-27 வேள்வியில் தவத்தில் தருமத் திலுறுதி
622 சத் எனப் படுமாம் பரத்தைக் கருதியே
செய்யும் செயலும் சத் எனப் படுமே.

17-28 நம்புதல் இன்றியே செய்திடும் வேள்வியும்
623 தானம் தருமம் இதர செயல்கள்
அசத்தாம் இகபரம் இதற்கு இலையே.

# அத்தியாயம் - 18

## முற்றும் துறந்த நிலை

அருச்சுனன் வேண்டினான்

18-01 தடந்தோள் கிருஷ்ணா துறவு தியாகம்
624 என்பதன் தத்துவம் தனையே தனித்தனி
யாகவே அறிந்திட விழைவன் நானே.

பகவான் கூறுவான்

18-02 விரும்பிச் செய்திடும் கருமம் துறப்பதைத்
625 துறவென முனிவரும், கருமப் பலனைத்
துறத்தல் தியாகமாய் அறிஞரும் அறைவரே.

18-03 செயலைத் தீயதாய்த் துறந்திடச் சொல்வர்
626 சிந்தனை யுளசிலர், சிலரோ வேள்வியும்
தவமும் கருமமும் துறத்தல் தடுப்பரே.

18-04 பாரதக் குரிசிலே தியாகம் குறித்து
627 எனது முடிவைக் கேள்நீ ஏனெனில்
தியாகம் மூன்றாய் விளக்கப் பட்டதே.

18-05 தவமும் தானமும் வேள்வியும் செய்தலைத்
628 துறத்தல் தவிர்த்தே செய்திட வேண்டும்
தவமும் தானமும் மற்றும் வேள்வியும்
அறிஞரைத் தூயவர் ஆக்கு வதாலே.

18-06 எனினும் இந்தச் செயல்கள், பார்த்தா
629 பற்றும் பயனும் துறந்து செய்கவே
இதுவென் உறுதியே உயர்ந்த கருத்தே.

18-07 சாத்திரக் கருமம் துறப்பது சரியல
630 அறிவின் மயக்கில் துறத்தல் மந்தமே.

18-08 உடலின் துன்பம் பயந்து துயரெனக்
631 கருமம் துறத்தல் உணர்ச்சி வகையே
துறவின் பயனைத் துறப்பார் பெறானே.

18-09 அருச்சுனா, நியமம் கூறும் கருமம்
632 புரிதல் வேண்டும் என்றும் மற்றும்
பலனும் தியாகம் செய்து கருமம்
புரிவார் தியாகமே தூயதாய்க் கருதுமே.

18-10 தூய்மை நிறைந்த அறிவுடைத் துறவி
633 ஐயமும் அகன்று இனியதில் விருப்பும்
இன்னா தவற்றில் வெறுப்பும் இலரே.

18-11 உடலுளார் முற்றும் துறத்தலும் முடியா
634 கருமம் பயனை மெய்யாய்த் துறப்பவர்
துறவி என்றே அழைக்கப் படுவரே.

18-12 தியாகி அல்லார் எய்தும் பயனும்
635 நல்லன தியன இரண்டும் கலந்தன
என்னும் மூவகை, எனினும் தியாகி
எய்தல் என்பது எதுவுமே இலையே.

18-13 கருமம் அனைத்தும் வெற்றி பெற்றிடச்
636 சாங்கிய சாத்திரம் சாற்றும் ஐந்து
காரணம் என்னிடம் கற்றிடு வீரனே.

18-14 உடலொடு கருத்தா பல்வகைக் கரணம்
637 பல்விதச் சக்திகள் மற்றும் தேவதை
முதலாம் ஐந்தும் காரணம் ஆகுமே.

18-15 மனிதன் மனத்தொடு வாக்கு, காயம்
638 மூலமாய்ச் செய்திடும் நல்லன அல்லன
எல்லாக் கருமக் காரணம் இவையே.

18-16 இந்நிலை தன்னில் ஒதுங்கி இயங்கும்
639 தன்னுடை ஆத்மா காரியக் கருத்தா
என்ற விசித்திர புத்தி உள்ளான்
அனுபவ அறிவிலான் பார்வை இலானே.

18-17 அகந்தை எண்ணம் அகன்றவன் பற்று
640 இல்லாப் புத்தி உடையான் மக்களைக்
கொல்லினும் குற்றமும் கொன்றவன் இலையே.

18-18 அறிவும் அறியப் படுவன அறிவோன்
641 மூன்றும் செயலில் தூண்டுதல் ஆகும்
கருமம் செய்கை கருத்தா என்னும்
மூன்றும் கருமக் கூறுக ளாமே.

18-19 குணத்தில் ஞானம் கருமம் கருத்தா
642 என்பன குணத்தின் வேற்றுமையினாலே
தனித்தனி ஒன்றும் மூவகைப் படுமே
அவைதமைச் சரியாய் அறிந்திடு நீயே.

18-20 அழிவிலா ஒன்றை எல்லா உயிரினும்
643 கண்டும் பிரிந்தவை தம்மில் பிரியாக்
காணும் அறிவே சத்துவ அறிவே.

18-21 பல்வகை உயிர்களில் இயங்கும் ஆத்மா
644 தனித்தனி யானவை என்றுணர் அறிவு
உணர்ச்சி வயத்தது என்றுநீ அறிகவே.

18-22 உண்மை உணராக் காரணம் இன்றியும்
645 குறுகிய நோக்கில் ஒவ்வொன் றதிலும்
ஒட்டும் ஆத்மா முழுமை ஆனதே
என்னும் அறிவே மந்தம் எனுமே.

18-23 நியதிகள் கூறும் கருமம் தனையே
646 பலனில் ஆசை பற்றும் இலாது
விருப்பு வெறுப்பு இலாதே இயற்றும்
கருமம் உண்மை சத்துவக் கருமமே.

18-24 ஆசை விருப்பில் அகந்தை கொண்டும்
647 அதிகம் முயன்றும் இயற்றும் கருமமோ
உணர்ச்சி வகைத்து என்று கருதுமே.

18-25 மயக்க நிலையில் திறமை கருதா
648 விளைவைக் கருதாப் பிறருக் கிழைக்கும்
இழப்பும் இன்னலும் கருதா தியற்றும்
கருமமே மந்தக் குணத்தது என்பரே.

18-26 அகந்தை அகன்றும் பற்றை விடுத்தும்
649 உறுதி யுடனும் நம்பி வெற்றி
தோல்வியில் துவள்தல் இன்றியே இயங்கும்
கருத்தா சத்துவக் கருத்தா என்பரே.

18-27 ஆசை மேலிடக் கருமப் பயன்பெற
650 விருப்பில் பேரவா கொடிய அசுத்த
இன்ப துன்பப் பாதிப் போடும்
இயங்கும் கருத்தா உணர்ச்சி வகைத்தே.

18-28 முரண்டு ஆபா சமொடு விடாப்பிடி
651 வஞ்சர மாற்றுச் சோம்பல் மனக்குறை
காலம் தாழ்த்தும் கருத்து மந்தமே.

18-29 புத்தியும் உறுதியும் குணத்தைப் பொறுத்தே
652 மூவகைப் படுமே அவைதம் தொடர்பை
தனித்தும் முழுதும் தனஞ்சய கேட்கவே.

18-30 சக்தி பிரம்மச் சரியம் செய்யத்
653 தக்கன தகாதன பயம்பய மின்மை
பந்தம் விடுதலை தமையும் அறியும்
அறிவே பார்த்தா சத்துவ அறிவே.

18-31 நல்லன தீயன செய்யத் தக்கன
654 தகாதன என்பன தவறாப் புரியும்
அறிவே உணர்ச்சி வகைய தாமே.

18-32 அறியா மைசூழ் தீயதை நல்லதாய்
655 எண்ணிப் பொருளை எல்லாம் விசித்திர
மாகவே உணரும் அறிவும் மந்தமே.

18-33 யோக மூலமாய் மனத்தின் இயக்கமும்
656 உயிரின் மூச்சின் இயக்கமும் மற்றும்
புலன்கள் இயக்கமும் கட்டுப் படுத்தும்
தளர்விலா உறுதியே சத்துவ உறுதியே.

18-34 பயனை விரும்பிப் பற்றுக் கொண்டு
657 அறமும் பொருளும் போகமும் அடைவதில்
உள்ள உறுதியே உணர்ச்சி வகையதே.

18-35 அறியா மையால் அச்சம் தூக்கம்
658 துயரம் அவநம் பிக்கை பகட்டு
விடாத உறுதியே மந்த வகைத்தே.

18-36 பாரத ஏறே மூவகை இன்பமும்
659 கேள்நீ பயிற்சியால் எதிலே ஒருவன்
இன்பம் கண்டே துயரைத் துடைத்தே.

18-37 முதலில் விடமாய் முடிவில் அமிர்தாய்த்
660 தோன்றும் இன்பம் தூயதாய் ஆத்ம
அறிவில் உதித்ததே சத்துவ இன்பமே.

18-38 புலன்கள் புலனறி பொருட்கள் இணைந்து
661 முதலில் அமிர்தாய் முடிவில் விடமாய்த்
தோன்றும் இன்பமும் உணர்ச்சி வகைத்தே.

18-39 தூக்கம் சோம்பல் கவனக் குறைவில்
662 தோன்றி முன்னும் பின்னும் ஆத்மா
மயங்கும் இன்பம் மந்த வகையே.

18-40 இயற்கை யிலெழும் மூவகைக் குணத்தே
663 விடுதலை அடைவார் மண்ணிலும் விண்ணிலும்
தேவர் தம்மிலும் எவரும் இலையே.

18-41 பிராமணர் சத்ரியர் வைசியர் சூத்திரர்
664 கடமை அவரவர் இயல்பில் பிறந்த
பண்பைப் பொறுத்தே பகுக்கப் படுமே.

18-42 மனத்தின் அடக்கமும் புலன்களின் அடக்கமும்
665 தவமும் பொறையொடு தூய்மை நேர்மை
ஞானமும் அறிவும் தெய்வநம் பிக்கை
பிராமணர் இயல்பில் எழுங்கட மையே.

18-43 வீரம் திறமை உறுதி கூர்மை
666 போரில் புறமுது கிடாமை இரக்கம்
ஆட்சியில் மாண்பு என்பவை முதலாம்
சத்ரிய ரியல்பில் எழுங்கட மையே.

18-44 உழுதல் ஆநிரை காத்தல் வாணிபம்
667 வைசியர் இயல்பில் பிறந்த கடமை
பணிவிடை முறையில் புரியும் கருமம்
சூத்திரர் இயல்பில் எழும்கட மையே.

18-45 மனிதன் தனது கடமை முடித்து
668 நின்றே பூரணம் எய்தும் கடமை
முனைவார் எங்ஙனம் பூரணத் துவம்தனை
எய்தும் என்பதைக் கூர்ந்து கேட்கவே.

18-46 உயிர்கள் எல்லாம் எவரில் பிறந்தவோ
669 இவ்வுல கெங்கும் யார்நிறைந் துளாரோ
அவரைத் தனது கடமை யெனத் தொழும்
மனிதன் பூரணத் துவமும் எய்துமே.

18-47 திறம்படப் பிறர்பணி செய்வதை விடவும்
670 குறைபடத் தன்பணி செய்தலே சிறந்தது
தனதியல் நியம வழியில் தன்பணி
செய்வார் பழியை எய்துதல் இலையே.

18-48 நல்வினை குறையுடைத் தாயினும் கைவிடல்
671 கூடா தீயினைப் புகையும் சூழ்தல்
போன்றும் எல்லாச் செயல்களும் குறையும்
உடையவே என்றறி குந்தி மகனே.

18-49 எல்லா இடத்தும் அறிவு உடையோர்
672 பற்றிலாய்த் தனையாண்டாசை துறந்து
தியாக மூலமாய்த் தளைகளில் விடுதலை
பெற்றுச் சுதந்திர மானதாம் உயர்ந்த
பேரின் பநோக்கிச் செல்வர் தாமே.

18-50 சித்தி அடைந்தார் உயர்நிலை ஞானம்
673 பரமும் எங்ஙனம் எய்தும் என்பதைச்
சுருக்கி என்னிடம் தெரிந்து கொள்கவே.

18-51
674

புத்தியொ டிணைந்தும் தூய்மை அடைந்தும்
உறுதியாய்த் தன்னை அடக்கி ஒலிமுதல்
இதர புலனறி உணர்வைத் துறந்தும்
விருப்பும் வெறுப்பும் ஒதுக்கி விடுத்தே.

18-52
675

தனித்தே இருந்து மனமொடு வாக்குக்
காயமும் அடக்கி யோகமும் தியானமும்
நிலைபெறப் பற்றிலா மையைப் பற்றியே.

18-53
676

முனைப்பு உண்மை அகந்தை ஆசை
கோபம் தந்திரம் விடுத்துத் தன்னலம்
இன்றி அமைதி உள்ளார் பரமும்
ஆகவும் தகுதி உடையார் ஆவரே.

18-54
677

பரமும் ஆகியே முகமும் மலர்ந்து
வருத்தம் விருப்பம் இன்றி எல்லா
உயிர்கள் தமையும் சமமாய்க் கருதுவார்
என்னிடம் உயர்ந்த பக்தியும் உடையரே.

18-55
678

பக்தியால் நான்யார் எத்தகை, என்பதை
மெய்யாய் அறிவார் அவ்வா றறிந்ததும்
உயர்ந்த பரம பதத்தை அடைவரே.

18-56
679

என்னில் புகலிடம் அடைந்து கருமம்
எல்லாம் செய்து எனது அருளால்
நிலைத்த அழிவிலா வீட்டை அடைவரே.

18-57
680

அனைத்துக் கருமமும் மனத்தால் எண்ணியே
துறந்து என்னை நினைந்து பக்தி
யோகம் முனைந்து என்னை நினைக்கவே.

18-58 என்னை நினைந்தே எனது அருளால்
681 அனைத்து இன்னலும் கடப்பாய் அகந்தை
முனைப்பில் நீயும் கேட்கிலை என்னில்
முற்றிலும் நீயுமே அழிவுறல் உறுதியே.

18-59 அகைந்தை யிலாழ்ந்து போரிடேன் என்னில்
682 உனது உறுதி பயனெதும் தந்திடா
இயற்கை உன்னைக் கட்டுப் படுத்துமே.

18-60 குந்தி மைந்த உனது இயல்பில்
683 உதித்த உனது கடமைத் தளையில்
மயங்கிச் செய்திட விரும்பாய் எனினும்
மறுவழி இன்றிதைச் செய்திட நேருமே.

18-61 அருச்சுனா, அனைத்து உயிர்தம் உளத்தில்
684 இருக்கும் இறையும் அவரின் மயக்கும்
சக்தியால் அனைத்து உயிர்களைக் குயவன்
திகிரிமேல் இருப்பது போன்று சுழற்றுமே.

18-62 பரதா அவனிடம் முழுதும் புகலிடம்
685 தேடிநீ ஒடுக அவனது அருளால்
உயர்ந்த அமைதி அடையும் என்றும்
நிலைத்த உன்னத வீட்டை அடையுமே.

18-63 ரகசியம் தம்மில் மிகவுயர் பரம
686 ரகசியம் உனக்கு உரைக்கப் பட்டதே
நீயும் இதனை நன்கு சிந்தனை
செய்தே விருப்பம் போல்செயல் படுகவே.

18-64
687

எனது உயர்ந்த உரையை மீளநீ
கேட்டிடு ரகசியம் அனைத்திலும் உயர்ந்தது
நீஎன் அன்பன் உறுதி உளத்தாய்
உரைக்கும் நானுன் நன்மை கருதியே.

18-65
688

உனது மனத்தை என்னிலே இணைத்தென்
பக்தன் ஆகுக வேள்விசெய் எனக்கே
என்முன் வீழ்ந்து தொழுதிடு நீயுமே
என்னிடம் வரும்நீ உனக்குநான் அளிக்கும்
உறுதியும் தருவேன் எனக்குநீ இனியனே.

18-66
689

கருமம் எல்லாம் துறந்தே என்னை
சரண்புகு கவலை உறாதே எல்லாப்
பழியிலும் விடுதலை அளிப்பேன் உனக்கே.

18-67
690

துறவு இல்லார் பக்தி இல்லார்
கேட்டிட விருப்பம் இல்லார், என்னை
இகழ்ந்து பேசுவார் இடத்தும் இதனை
நீ, ஒரு போதும் உரைத்தி டாதே.

18-68
691

இந்த உயர்ந்த ரகசியம் எனது
பக்தர் இடத்து உரைக்கும் என்னில்
உயர்ந்த பக்தி செலுத்தி ஐயம்
இலாது என்னை அடைதலும் உண்டே.

18-69
692

எனக்கு மனிதரில் சிறந்த பணிவிடை
புரிவார் இவரினும் வேறிலை இவரினும்
சிறந்த எனது அன்பரும் இலையே.

18-70 நமது இந்தப் புனித உரையைப்
693 படிப்பார் தம்மால் அறிவெனும் வேள்வியால்
தொழப்படும் நான்என மனமிது போலுமே

18-71 முழுதும் நம்பியே பொறாமை இன்றியே
694 கேட்பார் தாமும் துன்ப விடுதலை
பெற்றுத் தருமச் சிந்தனை உடையார்
உடைய ஒளிவிடு உலகை அடைவரே.

18-72 தனஞ்சய இதனை ஒரேமுழு மனத்துடன்
695 கேட்டனை நீயுமே அகன்றதா உனது
அறியா மையில் எழுந்த மயக்கமே.

அருச்சுனன் கூறினான்

18-73 அழிந்தது எனது மாயை உனது
696 அருளால் அறிவும் கிடைத்தது, அழிவிலாய்
அடைந்தேன் உறுதியும் நானே, ஐயமும்
அகன்றது உன்வழி நடப்பேன் நானே.

18-74 வாசு தேவர் மற்றும் பெருவுளம்
697 படைத்த அருச்சுனன் இடையே நடந்த
அற்புத உரையை நானும் கேட்டிட
எனது உரோமம் சிலிர்த்து நிற்குமே.

18-75 வியாசர் அருளால் இவ்வுயர் ரகசியம்
698 யோகம் யோகத் தலைவனாம் கிருஷ்ணன்
வாய்வழி நேரிலே உரைத்ததை நானுமென்
கண்முன் நேரிலே கேட்கலுற் றேனே.

*18-76*
*699*

மன்னா, கேசவன் அருச்சுனன் இடையே
நடந்த அற்புதப் புனித உரையை
நினைந்து நினைந்து இன்புறும் நானே.

*18-77*
*700*

அந்த அரியின் அற்புத வடிவை
நினைந்து நினைந்து எனது வியப்பும்
உயர்ந்தே பன்முறை மகிழ்வேன் நானுமே.

*18-78*
*701*

யோகத் தலைவன் கிருஷ்ணன் எங்கெலாம்
இருப்பினும் விசயன் அருச்சுனன் எங்கெலாம்
இருப்பினும் அங்கெலாம் வளமும் வெற்றியும்
இன்பமும் இருக்கும் என, நான் உணர்வனே.

*** சுபம் ***